# சுயாட்சியா பிரிவினையா?




ம. பொ. சிவஞானம்




மயிலாப்பூர் :: சென்னை - 4.




# முன்னுரை

1959 - பிப்ரவரி 2-ல் திருச்சி நகரை அடுத்துள்ள உரையூர்ப் பகுதியில் அவ்வூர் தமிழரசுக் கழகத்தார் நடத்திய மாநில சுயாட்சி மாநாட்டில் தலைமை தாங்கி யான் நிகழ்த்திய சொற்பொழிவு இந்நூல் வடிவம் பெற்றுள்ளது. " அதிருப்தி வளர்கிறது " என்ற தலைப்பின் கீழுள்ள பகுதி மட்டும் புதிதாகச் சேர்க்கப்பட்டுள்ளது. இன்றைய அரசியல் அமைப்பில் மத்திய அரசுக்கும், மாநில அரசுகளுக்கும் ஒதுக்கப்பட்டுள்ள அதிகாரங்களின் பட்டியல்களும் நூலின் இறுதியில் சேர்க்கப்பட்டுள்ளன.

'சுயாட்சியா, பிரிவினையா ?' என்ற கேள்வி முதலில் ஆளுங் கட்சியினரைப் பார்த்தே கேட்கப்படுகின்றது. ஆம்; பிரிவினையைத் தவிர்க்கவேண்டுமானால், மாநிலங்களுக்கு உடனடியாகச் சுயாட்சி வழங்கியாக வேண்டும் என்ற உண்மை அரசினருக்கு உணர்த்தப்படுகின்றது. அடுத்து, நாட்டைத் துண்டாடக் கோரும் பிரிவினைச் சக்திகளைப் பார்த்தும் 'பிரிவினையா, சுயாட்சியா ?' என்று கேட்கிறோம். பிரிவினையால் கிடைக்கக்கூடிய நன்மைகள்

அனைத்தையும் சுயாட்சி பெறுவதால் அடைய முடியும் என்ற உண்மையும் இந்நூலில் உணர்த்தப்படுகின்றது.

இன்றைய அரசியல் அமைப்பால் ஏற்பட்டுள்ள கேடுகளுக்குப் பரிகாரம் பிரிவினையன்று, சுயாட்சியே, என்பது பிரிவினை வாதிகளுக்கு உணர்த்தப்படுகின்றது.

ஆக, ஏக பாரதம் பேசுவோரும் சரி, தென்னகத்தை இந்தியாவிலிருந்து துண்டாட வேண்டுமென்று கூறுவோரும் சரி, விருப்பு வெறுப்பின்றி இந்நூலைப் படிப்பார்களாயின், "மாநிலங்களுக்குச் சுயாட்சி, மத்தியில் சமஷ்டி" என்ற தமிழரசுக் கழகத்தின் கொள்கையை அப்படியே ஏற்றுக்கொள்வார்கள் என்பதில் எனக்கு ஐயமில்லை.

இந்த நூலைப் பொது மக்களிடையே—குறிப்பாக காங்கிரஸ், தி. மு. க. வட்டாரங்களைச் சார்ந்தவர்களிடையே விற்பனை செய்வதில் தமிழரசுக் கழகத்தார் ஊக்கங் காட்ட வேண்டும். நமது கழகத்தின் சுயாட்சிக் கொள்கைக்கு ஆதரவு தேட இந்தப் புத்தகம் ஒரு சிறந்த சாதனம்.

சென்னை
1-11-59

**ம. பொ. சிவஞானம்**

# சுயாட்சியா, பிரிவினையா?

## இந்தியா : அன்றும் இன்றும்

உறையூர் தமிழரசுக் கழகத் தோழர்கள் இம்மாநாட்டிற்கான ஏற்பாடுகளை மிகச் சிறப்பாகச் செய்திருக்கிறார்கள். 'காங்கிரஸ் கட்சி மாநாடு' என்றால், ஆயிரம்-பதினாயிரமாக வெள்ளிப் பணங்களை அள்ளிக் கொடுக்க 'வள்ளல்கள்' உண்டு. தமிழரசுக் கழக மாநாட்டிற்கு அப்படி உதவுவார் இல்லை. ஒரு சிலரே தந்த சொற்பப் பொருளுதவியைக் கொண்டு, தங்கள் உழைப்பைப் பெருக்கி, இந்த மாநாட்டை நடத்துகின்றார்கள் உறையூர் தோழர்கள். அவர்களுடைய உழைப்புக்கு என் பாராட்டு.

### வரலாற்றில் முதல் மாநாடு

'மாநில சுயாட்சி' கோரும் இம்மாநாடு உறையூரில் நடைபெற்றாலும் தமிழகம் முழுவதற்குமான மாநில மாநாடாகும். தமிழகத்தின் வரலாற்றில் தமிழ் இனத்திற்குச் சுயாட்சி கோரும் மாநாடு முன் எப்போதும் நடந்ததில்லை. இதுவே முதல் மாநாடு. தமிழரசுக் கழகத்தாராகிய நாம் 'தமிழக எல்லை மாநாடு'—'தலைநகர் பாதுகாப்பு மாநாடு'—'ஆட்சி மொழி மாநாடு' எனப் பல மாநாடுகளை நடத்தி

யிருக்கிறோம். அந்த மாநாடுகளில் வெளியிடப்பட்ட கோரிக்கைகளில் வெற்றி கண்ட பிறகே இந்த மாநாட்டை நடத்துகின்றோம். இதிலும் வெகு விரைவில் வெற்றி பெறுவோம் என்ற நம்பிக்கை எனக்கு உண்டு.

நாம் கூடியிருக்கும் இந்த உறையூர்ப்பதி, வரலாற்றுச் சிறப்பு வாய்ந்தது. தமிழ் மூவேந்தர்களின் பெருமையோடு உறையூரின் பெருமையும் இணைந்து கிடக்கின்றது. அதனாற்றான், மாநாட்டுப் பந்தலுக்கு "மூவேந்தர் அரங்கு" எனப் பெயரிட்டிருக்கிறோம். நாம் சுயாட்சி கோருவது காமராசர் ஆட்சியிட மிருந்தன்று; நேரு ஆட்சியிட மிருந்து. ஆம்; காமராசர் ஆட்சிக்கு மேலும் அதிகாரங்கள் வழங்கப்பட வேண்டுமென்று நேரு ஆட்சியைக் கேட்கின்றோம். "மத்திய ஆட்சி மத யானை போன்றது. அந்த யானையை எதிர்த்து வெற்றிபெறச் சின்னஞ்சிறு தமிழரசுக் கழகத்தால் முடியுமா?"—என்று சிலர் நினைக்கலாம். ஏன் முடியாது?

## யானையைக் கோழி வென்றதே!

உறையூரிலே சிறு கோழியொன்று பெரிய மத யானையை எதிர்த்து வெற்றி பெற்றதாம்! இப்படி ஒரு செய்தி சிலப்பதிகாரக் காப்பியத்தில் இருக்கின்றது. அதனால் உறையூருக்குக் 'கோழியூர்' என்றும், இவ்வூரைத் தலை நகராகக் கொண்டு சோழ நாட்டை ஆண்ட மன்னனுக்குக் 'கோழிக் கோன்' என்றும் பெயருண்டு. கோழி யொன்று மத யானையை வெல்ல முடியுமானால், சிறிய தமிழரசுக் கழகம் பெரிய மத்திய ஆட்சியை ஏன் வெற்றி கொள்ள முடியாது? யானையைக் கோழி வென்ற கதைகூடக் கற்பனை யாக இருக்கலாம். ஆனால், தமிழரசுக் கழகம் மத்திய ஆட்சியை வெற்றி கொள்ளப் போவது உண்மை! உண்மை!! உண்மை!!!

## டில்லியை வென்ற வரலாறு

முன் பலமுறை நாம் மத்திய அரசோடு அறவழியில் போராடி அதனை வெற்றி கண்டிருக்கிறோம். சென்னையை ஆந்திர - தமிழக ராஜ்யங்களின் கூட்டுத் தலைநகராக்க முன்பு மத்திய ஆட்சி முடிவு செய்தபோது, அதை எதிர்த்து சென்னையைத் தமிழகத்திற்கு மட்டுமே தலைநகராக்கும் கிளர்ச்சியில் தமிழரசுக் கழகம் மத்திய ஆட்சியை வெற்றி கொள்ள வில்லையா?

பன்னிரண்டு ஆண்டுகளுக்கு முன்பு குமரி மாவட்டம் தமிழகத்தோடு சேருமென்று யாரேனும் எதிர்பார்த்தார்களா? சேர்க்கவேண்டுமென்றுதான் தமிழரசுக் கழகமன்றி வேறு எந்தக் கட்சியினரேனும் கிளர்ச்சி செய்ததுண்டா? யாரும் சிந்திக்காத நேரத்திலே, தெற்கெல்லைக் கிளர்ச்சியைத் துவக்கி வைத்து, அதைஅகில இந்தியப் பிரச்சனையாக்கி வைத்ததும் தமிழரசுக் கழகம்தானே? குமரி மாவட்டம் இன்று தமிழகத்தோடு சேர்க்கப்பட்ட தென்றால், அது மதயானை போன்ற மத்திய அரசுமீது தமிழரசுக் கழகம் அடைந்த வெற்றி யல்லவா?

## சர்வ கட்சிக் கூட்டணி கண்ட சாதனை!

தேவி குளம் - பீருமேடு பிரச்சனையில் தமிழர் கோரிக்கைக்கு எதிராக மத்திய ஆட்சி தீர்ப்பளித்தபோது தமிழரசுக் கழகத்தின் முயற்சியால் 'சர்வ கட்சிக் கூட்டணி' அமைக்கப்படவில்லையா? அந்தக் கூட்டணியின் துணை கொண்டு மாநில—மத்திய ஆட்சிகள் அஞ்சி நடுங்கும் வகையில் நாடெங்கும் அர்த்தால் நடைபெற வில்லையா?

"சித்தூர் மாவட்டம், தகராறுக்கிட மில்லாத தெலுங்கு மாவட்டம்" என்று முத்திரை போட்டு அதனை ஆந்திரத்

திற்கு வழங்கியது மத்திய அரசு. அந்த முடிவை எதிர்த்துத் தமிழரசுக் கழகம் நடத்திய போராட்டம், மத்திய அரசுக்கு எதிரானதுதானே? மகத்தானதொரு போராட்டத்துக்குப் பிறகு மத்திய ஆட்சியின் பிரதமர் தமது பழைய முடிவை மாற்றிக்கொள்ள வில்லையா?

அமிர்தசரசில் கூடிய காங்கிரஸ் மகாசபை, மொழி வாரி ராஜ்ய அமைப்புக்கு எதிராகத் தட்சிணப் பிரதேசத் திட்டத்தை தென்னாட்டின்மீது திணிக்கத் துணிந்தபோது அதனை எதிர்த்துப் போராட "சர்வ கட்சிக் கூட்டணி" கண்டது தமிழரசுக் கழகம். அந்தக் கூட்டணியைப் பயன் படுத்தி அதிகார மதம் பிடித்த மத்திய அரசின் தட்சிணப் பிரதேசத் திட்டத்தை முறியடிக்க வில்லையா?

இப்படி, மத்திய ஆட்சியின் மீது தமிழரசுக் கழகம் அடைந்த வெற்றிகள் பல உண்டு. அந்தச் சாதனைகளை நினைப்பூட்டி, இப்போதும் சொல்லுகின்றேன்: இன்று இந்த மாநாட்டின் வாயிலாக நாம் கோரும் 'மாநில சுயாட்சி'யையும் விரைவில் அடையப்போவது திண்ணம்.

## தடைச் சக்திகள்

துரதிருஷ்டம் என்ன வென்றால், நமது கோரிக்கைக்குத் தடையாக இருக்கும் முதல் சக்தி மத்திய அரசன்று; மாநில ஆட்சியுமன்று. தமிழகத்தின் விடுதலைக்குப் பாடு படுவதாகச் சொல்லிக்கொள்ளும், தி.க. - தி. மு. க. - 'தினத் தந்தி' கட்சிக்காரர்களே. இந்தத் தடைகளைத் தாண்டிய பிறகே நாம் நேரு ஆட்சியிடம் போராட முடியும்.

அடுத்து உள்ள தடைச்சக்தி, ஏகாதிபத்திய பாணியில் இந்தியாவின் ஐக்கியத்தை விரும்பும் காங்கிரஸ்காரர்கள். இவர்கள் நமது சுயாட்சிக் கோரிக்கையைக் கண்டு அஞ்சு

வது அறியாமையின் விளைவு. இராஜ்யங்களுக்குச் சுயாட்சி வழங்கினால்மட்டுமே இந்தியாவின் ஐக்கியத்தைக் காக்க முடியும் என்ற உண்மையை அவர்களுக்கு நாம் உணர்த்த வேண்டும். உணர்த்திவிட்டால் அவர்கள் நமது லட்சிய வெற்றிக்கு உதவியாக இருப்பார்கள். இதில் ஐயமில்லை.

## மரம் பழுத்தால் வௌவால்கள் வரும் !

"தமிழரசுக் கழகம் மிகமிகச் சிறிய கட்சி; அதனால் எதையும் சாதிக்க முடியாது" என்று, இதுவரை எதையுமே சாதித்தறியாத பெ.ர்.ரீ.ய கட்சி ஒன்று கூறுகின்றது. மிகப் பெரிய தேருக்கு ஒரு சிறிய அச்சாணிதான் காப்பாக இருக்கின்றது. அதுபோல, மூன்று கோடி மக்களைக் கொண்ட தமிழகத்தின் நலன்களுக்குக் காப்பாக இருப்பது சின்னஞ் சிறிய தமிழரசுக் கழகம்தான்.

"தமிழகம்" என்ற விருட்சத்திற்குத் தண்ணீர் ஊற்றி வளர்க்கும் 'தோட்டக்காரர்கள்' தமிழரசுக் கழகத்தார். மரம் பழுத்தால் வௌவால்களை (மற்ற கட்சியினரை) 'வா' என்று அழைக்க வேண்டும்? அழைக்காமலே ஓடிவருவார்கள், நமது உழைப்பின் பலனை அனுபவிக்க! அதுதானே, வழக்கம்-வரலாறு!

## உள்ளத்தில் சுயாட்சி; உதட்டில் பிரிவினை !

நமக்கு எதிராக நாட்டுப் பிரிவினை கோருபவர்கள் உதட்டளவில்தான் 'தனித் திராவிடம்'—'சுதந்திரத் தமிழ் நாடு' என்றெல்லாம் கோருகிறார்கள். அவர்கள் உள்ளமும் "தமிழகம் சுயாட்சி பெற்றால் போதும்; உண்மையில் கிடைக்கக் கூடியதும் அதுதான்" என்று எண்ணுவதை நான் அறிவேன். இதனை வெளிப்படையாகச் சொல்லி விட்டால், அப்புறம் அவர்கள் தனிக் கட்சி நடத்தாமல்

தமிழரசுக் கழகத்திற்கு வந்துவிட நேரிடுமல்லவா! அதனல் 'உள்ளத்திலே மாநில சுயாட்சி, உதட்டிலே பிரிவினைக் கோஷம்' என்ற நிலையில் காலங் தள்ளி வருகின்ருர்கள்.

தமிழக அமைச்சர்கள், பிரிவினைக் கூச்சலை எதிர்த்துக் கூட்டந்தோறும் பேசுகிருர்கள். நாம் கோரும் மாநில சுயாட்சிபற்றி அமைச்சர்கள் அத்தனை பேரும் மௌனம் சாதிக்கிருர்கள். அவர்களுக்கும் தெரியும், "சிவஞானம் கிடைக்கக் கூடியதை, கிடைக்க வேண்டியதைத்தான் கேட்கிருன்" என்று. ஆனல், என்னேடு சேர்ந்து தமிழக சுயாட்சிக்குக் கிளர்ச்சி செய்தால் 'டில்லித் தெய்வங்கள்' கோபித்துக் கொள்ளும் என்று அவர்கள் பயப்படுகிருர்கள். அவர்களும் பதவியைவிட்டு வெளியே வந்தால் நம்மை ஆதரிப்பார்கள். முன்னர் ஆதரித்தவர்கள்தானே!

## காந்தி-விநோபா-நேரு ஆதரவு

மாநில சுயாட்சிக் கொள்கை எனது கற்பனையிலிருந்து பிறந்த லட்சியமன்று; காந்தியடிகள் கூறியதே. "இந்தியாவுக்கு எத்தகைய சுதந்திரத்தை நான் கேட்கின்றேனே, அத்தகைய பூர்ண சுதந்திரம் இராஜ்யங்களுக்கும் வேண்டும்; ஆனல், சுதந்திரம் என்பது இந்தியாவிலிருந்து பிரிந்து போவதன்று"—என்ருர் காந்தியடிகள். 'டில்லி டைரி' என்ற ஆங்கில நூலில் இதைக் காணலாம்.

1947-ல் இந்தியா வந்த பிரிட்டிஷ் மந்திரி சபைத் தூதுக் குழுவினர் வெளியிட்ட திட்டத்திலும், "மூன்று அதிகாரங்கள் மத்திய அரசுக்கு; மற்றவை அனைத்தும் மாநிலங்களுக்கு" என்று கூறப்பட்டிருந்தது. அந்தத் திட்டத்தை அப்போது காங்கிரஸ் மகாசபை மன நிறைவோடு ஏற்றுக்கொண்டது.

ஆச்சார்ய வினேபாஜியும் நானும் சந்தித்துப் பேசிய போது, "நீங்கள் கோரும் மாநில சுயாட்சியை நான் ஆதரிக்கிறேன்" என்று அப்பெரியார் என்னிடம் கூறினர். பிரதமர் நேருவும் அதிகாரங்கள் மத்தியில் குவிந்திருப்பதை விரும்பவில்லை; வெறுத்தும் பேசியிருக்கிருர். இதனல் கிளர்ச்சி எதுவுமின்றிப் பிரதமர் நேருவே மாநிலங்களுக்குச் சுயாட்சி வழங்கிவிடுவார் என்று நான் நம்பிவிடவில்லை. டாட்டாக்களும், பிர்லாக்களும், டால்மியாக்களும் அவர் அப்படிச் செய்வதை விரும்பமாட்டார்கள்.

## வேங்கடத்திற்கு வேலியிடோம்!

தமிழரசுக் கழகம் சுயாட்சி கோருவது தமிழ் வழங்கும் மாநிலத்திற்கு மட்டுமன்று; இந்தியாவிலுள்ள எல்லா மாநிலங்களுக்கும் சுயாட்சி வழங்கப்பட வேண்டுமென்பதே நம் கழகத்தின் கொள்கை. ஆனல், தமிழரசுக் கழகம் வேங்கடத்திற்குத் தெற்கிலுள்ள நிலப்பரப்பில் மட்டுமே இயங்கும் ஒரு மாநில அமைப்பு. அதனல், சுயாட்சிக் கிளர்ச்சியைத் தமிழகத்தின் எல்லைக்குள்ளேயே நடத்துகின்றது நம் கழகம். மிக விரைவில் 'அகில இந்திய மாநாடு' ஒன்றைச் சென்னையில் கூட்டுவோம். "அப்படி ஒரு மாநாட்டைக் கூட்ட அனுமதிப்பது அபாயத்தில் முடியலாம்" என்று 'மதருஸ் மெயில்' பத்திரிகையில் ஒருவர் எழுதியிருக்கிருர். 'ஏக பாரதம்' விரும்பும் 'மெயில்' பத்திரிகை, அகில இந்திய மாநாட்டைக் கண்டு அஞ்சுவானேன்? நாம் வேங்கடத்திற்கு வேலி போடுவோரல்லர்.

பாரதப் பெருநிலத்தின் வரலாறு, மிக்க சுவையானது; பல்வேறு சிக்கல்கள் உடையதும்கூட. பாரதம், நிலப்பரப்பால் ஒரே நாடு போன்றதுதான். ஆனல், அந்த நிலப்பரப்பில் வாழும் மக்கள், பேசும் மொழியாலும் வாழ்க்கை

நெறியாலும் ஒரே இனத்தவர் அன்று. ஆம்; வெவ்வேறு மொழிகளைப் பேசும் பல்வேறு தேசிய இனங்களைக் கொண்ட ஒரு உப கண்டம் போன்றது பாரதப் பெருநிலம். இதை அடிப்படையாகக் கொண்டே 'மாநில சுயாட்சிக் கோரிக்கை'யை ஆராய வேண்டும்.

## பேரரசுகளின் பிறப்பும் இறப்பும்

தமிழகத்தின் அரசியல் வரலாறு தனித் தன்மை வாய்ந்தது. ஆந்திரம், கேரளம், கன்னடம், வங்காளம், அசாம், ஒரிசா, உத்திரப் பிரதேசம், பாஞ்சாலம் போன்ற நாடுகளின் வரலாறும் அத்தகையதே. குமரி முதல் இமயம்வரை பரவிக் கிடக்கும் பாரதப் பெருநிலம் முன் எந்தக் காலத்திலும் ஒரு குடைக்கீழ் இருந்ததில்லை. ஒரு குடைக்கீழ் கொண்டுவர முயற்சிகள் நடந்ததுண்டு. ஆனால், அது முழுமை பெறுவதற்கு முன்பே தோல்வி கண்டுவிட்டது.

அசோகன், வடக்கிலிருந்து கொண்டு தென்குமரிவரை அரசு செலுத்த முயன்றான். அதற்காகப் பெரும் படை எடுப்பையும் நடத்திப் பார்த்தான். ஆனால், கலிங்கத்திற்குத் தெற்கே அசோகப் பேரரசு நீளவில்லை.

பிற்காலத்தில் இராசராச சோழன், தெற்கிலிருந்து புறப்பட்டு, வடக்கு நோக்கிப் படை எடுத்தான், இமயம் வரை பேரரசு காண! அவனது முயற்சியும் கங்கை யாற்றைக் கடப்பதற்கு முன்பே தோல்வி கண்டுவிட்டது. அரைகுறையாக அமைந்த அசோக-சோழப் பேரரசுகள் அதிக காலம் நீடிக்கவில்லை; நிலைகுலைந்து அழிந்து போயின.

பின்னர் தோன்றிய மொகலாயர் பேரரசும் தெற்கு வரை நீண்டதுண்டு. ஆனால், அதுவும் நெடுங்காலம்

நிலைக்கவில்லை. இறுதியாக, பதினெட்டாம் நூற்றாண்டில் முளைத்த ஆங்கிலப் பேரரசும் மக்கள் எதிர்ப்பின் முன்னே நிலைத்து நிற்க முடியாமல், 1947 ஆகஸ்டு 15-ல் 'மாண்டு' போனதைக் கண்டு விட்டோம்.

## மக்கள், சாம்ராஜ்யங்களின் எதிரிகள்!

இந்தியாவில் தோன்றிய பேரரசு எதுவாயினும் சரி; அதன் தலைமை அசோகன், இராச ராசன் ஆகிய உள்நாட்டாரிடமும் இருந்திருக்கலாம். ஆங்கிலேயர் போன்ற வெளிநாட்டவரிடமும் இருந்திருக்கலாம். ஆனால், எந்தப் பேரரசும் மக்கள் மனவழி அமையவில்லை என்பதை மறந்து விடக் கூடாது. ஆம்; சக்கரவர்த்தியின் தலைமையின் கீழ் சாம்ராஜ்யம் அமைவதை மக்கள் எந்தக் காலத்திலுமே விரும்பியதில்லை. அதாவது, ஒரு இனத்தவரின் அல்லது ஒரு மதத்தவரின் ஆதிக்கத்தின் கீழ், பிற இனத்தவர் அல்லது மதத்தவர் அடிமைப்படுத்தப்படுவதை மக்கள் எந்தக் காலத்திலுமே ஆதரித்ததில்லை. சுருங்கச் சொன்னால், மக்கள் சக்தி, சாம்ராஜ்யங்களை அழித்திருக்கின்றது; சாம்ராஜ்யங்களை அமைத்ததில்லை. இதுதான் ஜன சமுதாயத்தின் உண்மை வரலாறு.

இந்தியாவின் வரலாற்றைப் படித்தால்,ஒரு சாம்ராஜ்யம் அழிக்கப்பட்டதும், அந்த இடத்தில் இன்னொரு சாம்ராஜ்யம் தோன்றியதையே பார்க்கிறோம். ஆம்; சாம்ராஜ்யங்கள் மாறிமாறி வந்ததன்றி, அடியோடு மறைந்துபோன செய்தி வரலாற்றில் இல்லை. முதன் முதலாக, 1947 ஆகஸ்டு 15-ல்தான் சாம்ராஜ்யங்களுக்கு முடிவுகட்டி-சக்கரவர்த்தியிடமிருந்து விடுதலைபெற்று—மக்கள் தங்களைத் தாங்களே ஆண்டுகொள்ளும் ஜனநாயகம் தோன்றியது. சாம்ராஜ்ய

மும் ஜனநாயகமும் இருளும் ஒளியும்போல. இரண்டும் ஒரே இடத்தில் பொருந்தி யிருக்க முடியா.

## பிரிட்டிஷ் இந்தியாவின் நிலப்பரப்பு

பிரிட்டிஷ் ஆட்சிக் காலத்தில் இந்தியாவின் அரசியல் எல்லை ஒரே மாதிரியாக இருந்ததில்லை. பீரங்கிப் பலத்தால் அமைத்த வல்லரசு ஆதலால், காலத்திற்குக்காலம் இந்தியாவின் அரசியல் எல்லை மாறிமாறிக் காட்சியளித்தது.

ஒரு காலத்தில், இந்திய வைசிராயின் ஆதிக்கத்திற்கு உட்பட்ட இந்தியாவில், ஆப்கானிஸ்தானமும் சேர்க்கப்பட்டிருந்தது. பின்னர், அது தனி நாடாக்கப்பட்டது.

அதற்குப் பிறகும், இலங்கை இந்திய அரசோடு இணைக்கப்பட்டிருந்தது. பின்னர், அதுவும் பிரிந்துபோய் விட்டது.

இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்பு வரை பர்மியரின் தாயகம் இந்தியாவின் ஒரு மாநிலமாக இருந்தது. 1935-ல் பர்மாவும் பிரிந்து போய்விட்டது.

1947-ல் பாகிஸ்தான் பிரிந்துபோன செய்தி பாரத மக்கள் அனைவரும் அறிந்ததே.

இப்படி, இந்திய உபகண்டம் விரிவதும் குறைவதுமாகக் காட்சியளித்து வந்திருக்கின்றது. இதிலிருந்து ஒரு உண்மை புலனாகின்றது. அதாவது, சாம்ராஜ்ய ரீதியில் இந்திய மக்களை ஒற்றுமைப்படுத்த முடியாது என்பதே அந்த உண்மை.

## இழந்தோம்; ஈடுகட்டினோம்!

வெள்ளையர்கள் வெளியேறுவதற்குமுன்பிருந்த இந்தியாவிலும் ஒரே அரசாங்கம் இல்லை. 'சமஸ்தான இந்தியா"

என்றும், 'பிரிட்டிஷ் இந்தியா' என்றும் இரண்டாகப் பிரிக்கப்பட்டிருந்தது பாரதம். சமஸ்தான இந்தியாவில் மன்னர்களுக்குச் சுதந்திரம் ; மக்களுக்கு அடிமை வாழ்வு! பிரிட்டிஷ் இந்தியாவிலோ அதுவுமில்லை. எல்லோரும் அடிமைகள் தாம். பிரிட்டிஷார் வெளியேறிய தேதியில், பிரிட்டிஷ் இந்தியாவின் ஒரு பகுதி 'பாகிஸ்தான்' என்ற பெயரில் பிரிந்து போய்விட்டது. அதற்கு ஈடாக சமஸ்தான இந்தியாவின் பெரும்பகுதி சுதந்திர இந்தியாவோடு பிணைக்கப்பட்டது.

## 'ஓதம்' உலரவில்லை !

இப்படி, பாரதத்தின் இரண்டாயிரம் ஆண்டுக் கால வரலாற்றைப் பார்த்தால், குமரிமுதல் இமயம்வரை ஒரே ஆட்சியோ, ஒரே விதமான அரசியல் முறையோ, நிலையான நில அமைப்போ இருந்ததில்லை என்பது தெளிவாகும். ஆகஸ்டு 15-ல் சாம்ராஜ்யப் பிடிப்பிலிருந்து இந்திய மக்கள் சமுதாயம் விடுதலை பெற்றது என்றாலும், சாம்ராஜ்ய ஆட்சிக் காலத்தில் ஏற்பட்ட 'ஆதிக்க ஓதம்' இன்னும் உலரவில்லை. ஆம்; இன்றைய சுதந்திர இந்தியாவின் அரசியல் சட்டம் 'சாம்ராஜ்ய மாடலா'கவே விளங்குகின்றது. அதை மாற்றி யமைக்கவே இந்த மாநாட்டைக் கூட்டியிருக்கிறோம்.

இந்திய உபகண்டத்திலுள்ள நாடுகள் மொழிவழிப்பட்டவை. உள்நாட்டுச் சக்கரவர்த்திகள் காலத்திலோ, அன்னிய சாம்ராஜ்யங்கள் இந்தியாவை அடிமைப்படுத்தி ஆண்ட நாளிலோ, குறுநில அரசுகளின் அல்லது மாநில அரசுகளின் எல்லை எதுவாகவேனு மிருந்திருக்கலாம். ஆனால், மக்கள் ஆட்சி நடைபெறும் இக்காலத்தில் - சாம்ராஜ்யங்களுக்கே சாவுமணி அடிக்கப்பட்டுவிட்ட இந்தத் தலைமுறை

யில் ராஜ்யங்கள் மொழிவழிதான் இருக்கமுடியும்; இருந்தால் தான் தேசிய ஐக்கியம் நிலைக்கும் ; நீடிக்கும்.

## முயற்சி நல்லது ; முறைதான் தவறு

அசோகர், அக்பர், இராசராச சோழர் ஆகியபேரரசர்கள் இந்தியாவை ஒரு குடைக்கீழ் கொணரும் முயற்சியில் தோல்வியுறக் காரணம் என்ன? இந்தியாவை ஐக்கியப் படுத்த எடுத்துக்கொண்ட முயற்சி நல்லதுதான். ஆனால்; ஏகாதிபத்தியப் பாணியில் இந்தியாவை ஒன்றுபடுத்த முயன்றதே அவர்கள் செய்த தவறு. அந்தக் காலத்தில் இன்று நாம்விரும்பும் ஜனநாயக சமஷ்டி அமைவதற்கான சந்தர்ப்பச் சூழ்நிலையும் இல்லை. அதைப்போல, இன்றையச் சூழ்நிலையில் பழைய சாம்ராஜ்யங்களை நிறுவவும் முடியாது.

எப்படியேனும்—என்ன விலைகொடுத்தேனும் இந்தியாவின் தேசிய ஐக்கியத்தைக் காக்க வேண்டும். இது அசோகர் காலமோ, இராசராச சோழன் காலமோ அல்ல. கண்டம் விட்டுக் கண்டம் பாயும் குண்டுகளைக் கண்டு பிடித்துள்ள காலத்தில் நாம் வாழ்கிறோம். வலிமை மிக்க வல்லரசுகள் சின்னஞ் சிறிய நாடுகளை உதைபந்தாடும் அரசியல் சூழ்நிலையில் இன்றைய உலகம் இருக்கின்றது. ஆகவே, குமரி முதல் இமயம் வரையுள்ள பாரதம் ஓர் ஐக்கியக் கூட்டரசாகத் திகழவேண்டும். அதையே, 'உரிமைக்கு எல்லை வேங்கடம்; உறவுக்கு எல்லை இமயம்' என்கின்றது தமிழரசுக் கழகம்.

இன்று அமுலிலுள்ள இந்தியக் குடியரசுச் சட்டம் "ஒரு மொழிக்கு ஒரு அரசு" என்பதைத் தவிர்க்க முடியாத சித்தாந்தமாக ஏற்கவில்லை. இன்றைய இந்திய அரசு, மொழிவழி அமைந்த சுதந்திர ராஜ்யங்களின் சமஷ்டியன்று.

அதனுற்ருன், இன்றைய அரசியல் அமைப்பை நமது லட்சியத்தின் வழி திருத்தியாக வேண்டும் என்கிறோம்.

## அமெரிக்க-ரஷ்ய நாடுகளைப் பார்!

"ஐக்கிய அமெரிக்கா" சுமார் இருபதுகோடி மக்களைக் கொண்ட பெருநாடு. அந்த நாட்டிலே சுதந்திர ராஜ்யங்களைக்கொண்ட கூட்டுக் குடியரசு நடைமுறையிலிருக்கிறது. சுமார் நாற்பது கோடி மக்கள் வாழும் இந்தியாவிலோ 'ஏக அரசு' நடக்கின்றது! மாநிலங்கள் ஜில்லா போர்டுகளின் நிலையில் வைக்கப்பட்டுள்ளன! அமெரிக்க சமஷ்டியில் வாழும் இருபது கோடி மக்களும் ஒரே மதத்தினர்; ஒரே நிறத்தினர்; ஒரே மொழியினரும்கூட. அவ்வளவு ஒற்றுமை இருந்தும் அமெரிக்க ராஜ்யங்களுக்குப் பூரண சுதந்திரம் வழங்கப்பட்டிருக்கிறது. இந்தியாவோ, மொழிவழியே பதினெட்டு நாடுகளை, அல்லது பல தேசிய இனங்களைக் கொண்டதாக இருக்கின்றது. மதங்களும் ஐந்துக்கு மேற்பட்டவை. நிறபேதம் வேறு உண்டு. இத்தனை வேற்றுமைகளை யுடைய ஒரு நாட்டில் ஏகஆட்சி நிலைப்பது சாத்தியமா?

சோவியத் ருஷ்யா, மொழிவழிப்பட்ட வேற்றுமைகளில் இந்தியாவைப் போன்றது. அந்த வகையில் உலக நாடுகளில் இந்தியாவோடு ஒப்பிடத்தக்க ஒரே நாடு சோவியத் ருஷ்யாதான். ருஷ்யாவில் மொழிவழி பல உபநாடுகள்—உறுப்பு ராஜ்யங்கள் உண்டு. அவற்றிற்குப் பரிபூரண உரிமை வழங்கப்பட்டிருப்பதைப் பார்க்கிறோம். சோவியத் ருஷ்யாவைப் பின்பற்றி இந்தியப் பெரு நிலமும் சுதந்திர ராஜ்யங்களைகொண்ட சமஷ்டி அரசாக ஏன் மாறக்கூடாது?

இனி, இன்றைய அரசியல் அமைப்பிலுள்ள குற்றங் குறைகளையும், அவைகளை அகற்றுவதற்கான வழிவகைகளையும் காண்போம்.

# அரசியல் அமைப்பிலுள்ள முக்கியக் குறைபாடுகள்

இன்று நடைமுறையிலுள்ள அரசியல் சட்டம், வயது வந்த வாக்காளர்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளைக் கொண்டு தயாரிக்கப்பட்டதன்று. நிலப்பிரபுக்கள், வகுப்பு வாதிகள், வர்த்தக—முதலாளிகள் ஆகியோரைக் கொண்ட பழைய சட்டசபைகளால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களே அரசியலைத் தயாரித்தார்கள். ஆம்; மொழிவழி இனங்களின் பிரதிநிதித்துவ சபையன்று, அரசியல் நிர்ணய மன்றம்.

## "பிர்மாக்"கள் செய்த பிழை

அரசியல் நகலைத் தயாரித்த சப் கமிட்டியில் 'ஏகாதிபத்திய'வாதிகளே அதிக அளவில் இருந்தனர். அவர்களில் ஒருவர்கூட "ஒரு மொழிக்கு ஒரு அரசு" என்ற சித்தாந்தத்தைப்பற்றிச் சிந்தித்தவர் அல்லர். அந்தச் சித்தாந்தத்தின் எதிரிகளாகவும் அவர்களை எண்ணலாம். டாக்டர் அம்பேத்கார், ஆங்கில சாம்ராஜ்யத்தின் ஆதரவாளர்—ஆதித் திராவிடர்களுக்குத் தனிநாடு கேட்டவர். அந்தப் பெரியார்தான் அரசியல் நகல் தயாரிப்புக் கமிட்டியின் தலைவராக இருந்தார். மற்றும், சர். அல்லாடி கிருஷ்ணசாமி

அய்யர், சர், என். கோபாலசாமி ஐயங்கார், சையத் முகமது சாதுல்லா ஆகியோர் சப் கமிட்டியின் உறுப்பினர்களாக இருந்தார்கள்.

தெளிவாகச் சொன்னல், நடைமுறையிலுள்ள அரசியலின் நகலைத் தயாரிப்பதில் தென்னிந்தியர்களே அதிக அளவில் பொறுப்பேற்றனர்; காங்கிரஸ் அல்லாதவர்களே அரசியல் நகலைத் தயாரித்தனர். பின்னர் அரசியல் நிர்ணய மன்றத்தில் சட்டமாக்கப்பட்டு, காங்கிரசின் பலத்தால், 1950 ஜனவரி 26-ல் நடைமுறைக்கு வந்தது. அரசியலைத் தயாரித்த பிர்மாக்கள் செய்த பிழையால்தான் மாநிலங்கள் உரிமையிழந்தன.

'ஒரு மொழிக்கு ஒரு அரசு' என்ற சித்தாந்தத்தை விரும்பியும் விரும்பாமலும் 1946 நவம்பர் 1-ல் நடைமுறைக்குக் கொண்டு வந்தது காங்கிரஸ். அதாவது, இந்திய மாநிலங்களை மொழிவழியே திருத்தி அமைத்தது. இந்தச் சூழ்நிலையில், நடைமுறையிலிருக்கும் அரசியல் சட்டம் எத்தகைய திருத்தமுமின்றி அப்படியே நீடிப்பது சாத்திய மில்லை.

## மக்களுக்கு அதிகாரமில்லை

அரசியலைத் தயாரித்தவர்கள், அதை ராஜ்யங்களிலுள்ள வாக்காளர்களின், அல்லது மாநில சட்டசபைகளின் அபிப்பிராயத்திற்கு வைக்கவில்லை—அரசியல் நகலுக்கு திருத்தங்கள் கோரவில்லை. 'வல்லான் வகுத்தது வாய்க்கால்' என்ற போக்கில் மேலிடத்தவரின் விருப்பப்படி அரசியல் சட்டம் நிறைவேற்றப்பட்டது. பிரிட்டிஷ் மந்திரிசபை தூதுக் குழுவினர் வழங்கிய திட்டத்தில் "பத்தாண்டு காலத்திற்கு

ஒருமுறை அரசியல் சட்டத்தின் மீது பொது மக்களுடைய அபிப்பிராயம் கோரப்படும்'' என்று குறிப்பிட்டிருந்தது. ஆனல், நடைமுறையிலுள்ள அரசியல் சட்டம், அதில் திருத்தங் காணவோ, அதன் வடிவத்தைப் பெருமளவில் மாற்றி அமைக்கவோ வாக்காளர்களுக்கு நேரடியாக உரிமை அளிக்கவில்லை.

இதுவரை நான் கூறியவை, நடைமுறையிலுள்ள அரசியல் சட்டத்தைத் தயாரித்தபோது ஏற்பட்ட குறைபாடுகளாகும். முதற் கோணல் முற்றும் கோணல் என்பது போல் முடிந்தது அரசியல் சட்டம்.

## ஜில்லா போர்டு 'சுதந்திரம்'

இன்றைய அரசியல் சட்டத்தின்படி, மாநிலங்கள் மொழிவழியே தனித்தன்மை உடைய நாடுகள் என்ருே, அல்லது அரசியல் நெறிப்படி சுதந்திர அந்தஸ்துடைய ராஜ்யங்கள் என்ருே ஒப்புக்கொள்ளப்படவில்லை. மாநில அரசுகள் வெறும் ஜில்லா போர்டுகளின் நிலைக்குத் தாழ்த்தப்பட்டிருக்கின்றன. மாநில அரசுகளின் கீழ் ஜில்லா போர்டுகளுக்கு எத்தகைய 'சுதந்திரம்' உண்டோ அத்தகைய 'சுதந்திரம்'தான் மத்திய அரசின் கீழ் மாநிலங்களுக்கு வழங்கப்பட்டிருக்கின்றன. இது 'கூட்டரசு'க் கொள்கைக்கே முற்றிலும் முரண்பட்ட நிலையாகும்.

அரசியல் சட்டத்தில் "அதிகாரங்கள்" மூன்று பட்டியல்களாகத் தொகுக்கப்பட்டுள்ளன. (அந்தப் பட்டியல்களை இந்நூலின் இறுதியில் காணலாம்.)

## அதிகாரப் பட்டியல் ஆராய்ச்சி

முதல் பட்டியலிலுள்ள அதிகாரங்கள் அனைத்தும் மத்திய அரசுக்கே உரியவை. அந்த அதிகாரங்களில் எந்த

ஒன்றிலும் தலையிடவோ, அல்லது கேட்டுப் பெறவோ மாநிலங்களுக்கு உரிமை கிடையாது.

இரண்டாவது பட்டியலிலுள்ள அதிகாரங்கள் அனைத்தும் மாநில அரசுக்கே உரியவை என்று அரசியல் சட்டத்தின் ஒரு விதி கூறுகின்றது. இன்னொரு விதி, பார்லிமெண்டின் மூலம் இந்த அதிகாரங்களில் ஒன்றையோ, பலவற்றையோ நினைத்தபோது பறித்துக்கொள்ள மத்திய அரசுக்கு உரிமை வழங்குகின்றது.

## இரட்டை யாட்சி !

மூன்றாவது பட்டியலிலுள்ள அதிகாரங்கள் மத்திய அரசுக்கும், மாநில அரசுக்கும் பொதுவானவை யாகும். அதாவது, மத்திய-மாநில அரசுகள் கூட்டாக நிர்வகிக்கத் தக்கவை. சான்றாக போலீஸ், கல்வி, சுகாதாரம், சட்டம் ஆகிய அதிகாரங்கள் மத்திய அரசுக்கும் உண்டு. அதன்படி மத்தியிலும் போலீஸ் இலாகா, கல்வி இலாகா, சுகாதார இலாகா, சட்ட இலாகா ஆகியவை இருக்கின்றன. அந்த இலாகாக்களுக்கென அதிகாரிகளும் அமைச்சர்களும் இருக்கிறார்கள். மாநிலங்களிலும், அந்த இலாகாக்களும், அவற்றிற்கென அமைச்சர்களும் அதிகாரிகளும் இருக்கிறார்கள். இப்படிக் கூட்டாக நிர்வகிப்பதில் நடைமுறையில் சிக்கல் ஏற்பட்டால், மத்திய அரசின் கருத்தே முடிவானதாகும் என்று அரசியல் சட்டம் கூறுகின்றது.

மாநில அளவில் பணி புரியும் போலீஸ் ஐ. ஜி போன்ற இலாகாத் தலைவர்களை நியமனம் செய்வதற்கான இறுதி அதிகாரமும் மத்திய அரசிடமே இருக்கிறது. போலீஸ் ஐ. ஜி. பதவிக்கு, மாநில அரசு தனக்குப் பிடித்த ஒருவரையோ, அல்லது பல பெயர்களடங்கிய பட்டியல் ஒன்றையோ மத்திய அரசுக்கு அனுப்பி வைக்கலாம்;

அவ்வளவுதான். ஐகோர்ட் நீதிபதிகள் முதலிய மற்ற உயர் பதவிகளுக்கான நியமனத்திலும் இதே நிலைமைதான்.

## கட்சிவழி ஆதிக்கம்

இன்றைய நிலைமையில், மத்தியிலும், மாநிலங்களிலும் ஒரே கட்சி அதிகாரம் செலுத்துவதால் 'கட்சிக் கட்டுப் பாடு' என்ற பெயரில் மாநிலங்களுக்கு உள்ள சொற்ப உரிமைகளிலும் மத்திய அரசு, காங்கிரசின் மூலம் அதிகாரம் செலுத்துகின்றது. இந்த ஆதிக்க முறை அன்றாட சம்பிரதாயமாகி விட்டது.

மாநிலங்களிலுள்ள மந்திரி சபையும்-சட்டசபையும் சிரஞ்சீவி வரம் பெற்றவை யன்று. மத்திய அரசுக்கு விசுவாசமுள்ள ஊழியனாக நடந்து கொள்ள மாநில அரசு மறுத்தால் சட்டசபையும் மந்திரிசபையும் கலைக்கப்படலாம். நியமன உத்தியோகஸ்தரான கவர்னர் மூலம் மாநிலத்தை ஜனாதிபதியே நேரடியாக ஆளலாம்.

## கவர்னர் ஒரு 'அன்னியர்!'

இந்த லட்சணத்தில், மாநில கவர்னர் மாநில மக்களிலே ஒருவராக இருக்கவும் வாய்ப்பளிப்பதில்லை. மாநிலத்திற்கு வெளியே யிருக்கும் ஒருவர் கவர்னராக நியமிக்கப்படுவது சம்பிரதாயமாகிவிட்டது. மாநில மக்களின் சுகதுக்கங்களில் தமது வாழ்நாள் முழுதும் பங்கு கொள்ள வாய்ப்பில்லாத ஒருவர் மந்திரி சபையையும் சட்டசபையையும் கண்காணிப் பவராக இருக்க உரிமை பெற்றிருக்கிறார்.

இதுவரை நான் கூறிய குறைகள் எல்லாம் நடை முறையிலுள்ள அரசியல் சட்டத்திலுள்ள பொத்தல்களா கும். இத்தனை பொத்தல்களுடைய பாத்திரத்தைக் கொண்டு, ஜனநாயகக் கேணியில் நீரெடுத்து, குடியரசுப்

பயிருக்குத் தண்ணீர் பாய்ச்சுகிறது காங்கிரஸ் கட்சி. பயிர் வளருமா ?

## அதிகாரக் குவியல் சோஷலிசமன்று !

காங்கிரஸ் கட்சி 'ஆவடி சோஷலிச'த்தை அமுலுக்குக் கொண்டுவரப் போவதாகச் சொல்லுகின்றது. அந்த வகையில் சில பல திட்டங்களையும் நிறைவேற்ற முயல்கின்றது என்பதை ஒப்புக்கொள்கின்றேன். ஆனால், ஒரே இடத்தில் அதிகாரங்களை அளவுக்கு மீறிக் குவிப்பது சோஷலிச சித்தாந்தத்துக்கு முரண்பட்டதாகும்.

மத்திய அரசில், வர்த்தகம்—தொழில் உள்ளிட்ட ஏராளமான அதிகாரங்கள் குவிக்கப்பட்டிருப்பதோடு, சோஷலிச இந்தியாவிலும் வர்த்தக—தொழில் துறைகளில் தனிநபர்களுக்குக் கணிசமான இடமுண்டு என்று சொல்லப்படுகின்றது. இந்த நிலையில் சோஷலிசம் வெற்றிபெற முடியாது. ஒருவர், மத்திய அரசிடம் ஒரு பெர்மிட் வாங்கினால் போதும். ஒரு தலைமுறைக்குத் தேவையான பணத்தைத் திரட்டி விடலாம். ஒரு லட்ச ரூபாய் லஞ்சம் கொடுத்து "லைசென்ஸ்" வாங்கினால், இருபது லட்சம் ரூபாய் திரட்டி விடலாம். இப்படித்தானே, மோசடி செய்யும் 'முந்திராக்கள்' தோன்றினார்கள்!

## பலம் வேண்டுமாம்; யாருக்கு எதிராக ?

'மத்திய அரசு பலமுடையதாக விளங்க வேண்டும்' என்று சொல்லப்படுகிறது. பலம் என்றால், யாருக்கு எதிராக ? எவரை அடக்க ?-என்பன விளங்கவில்லை. அன்னிய வல்லரசுகளுக்கு எதிராக இந்தியப் பேரரசு பலம் பெற்றிருக்க வேண்டும் என்றால் அதை நான் ஏற்கிறேன். அந்த வகையில் மத்திய அரசுக்குத் தேவைப்படுபவை அயல்நாட்டு உறவு-பாதுகாப்பு-போக்குவரத்து

ஆகிய மூன்றுமாம். அந்த அதிகாரங்கள் மத்திய அரசிடம் இருக்க வேண்டும் என்பது தமிழரசுக் கழகத்தின் முடிந்த கொள்கை.

இந்த மூன்றுக்கும் அதிகமாக இன்று டில்லியில் அதிகாரங்கள் குவிக்கப்பட்டிருக்க வேண்டிய அவசியம் என்ன ? உண்மை என்ன வென்றால், மத்திய அரசுக்கு மாநிலங்கள் மீது சந்தேகம் ; அல்லது மாநிலங்கள் மீது ஆதிக்கம் செலுத்த வேண்டுமென்ற ஆசை. இதனை எந்தக் காங்கிரஸ்காரரேனும் மறுக்க முடியுமா ?

அன்னிய வல்லரசுகளிட மிருந்து இந்தியாவைப் பாது காக்கும் பொறுப்பு சுகாதார இலாகாவிடமா இருக்கிறது ? அல்லது, கல்வி-உணவு-போலீஸ் இலாகாக்களிடந்தான் இருக்கிறதா? 'இல்லை' என்றால், அந்த இலாகாக்கள் மீதும் மத்திய அரசு அதிகாரம் செலுத்துவானேன் ? மாநில மக்களுக்குத் தங்கள் ராஜ்யம் செழிப்பாக இருக்க வேண்டும் என்பதில் அக்கரை உண்டு. மாநில மக்கள் ஆரோக்யத்துடனும், கல்வி-அறிவு பெற்றும் நல்வாழ்வு நடத்தவேண்டும் என்ற ஆசை மாநிலத்தை ஆளுவோருக் கும் உண்டு. ஆகவே சுகாதாரம்-கல்வி இன்னபிற விஷயங் களில் மாநிலங்களுக்குப் பரிபூரண சுதந்திரம் வழங்கலாம்.

## தேச பக்தியில் சந்தேகம் !

போலீஸ் மந்திரி பக்தவத்சலம் என்னைக் கண் காணிக்க சி. ஐ. டி.க்களை அனுப்புகிறார். எனது சொற் பொழிவைக் குறிப்பெடுக்க போலீஸ் சுருக்கெழுத்தாளரை ஏவுகிறார். அதே நேரத்தில், போலீஸ் அமைச்சரான அவரைக் கண்காணிக்க மத்திய அரசாங்கம் தனியாக ஒரு போலீஸ் இலாகாவை சென்னையில் வைத்துக்கொண்டிருக் கிறது. ஆம்; எனது தேச பக்தியில் பக்தவத்சலனாருக்குச்

சந்தேகம்! பக்தவத்சலனாரின் தேசபக்தியில் பண்டித பந்த் பெருமானாருக்குச் சந்தேகம் ! இதுதான் சுதந்திர இந்தியா வின் இன்றைய நிலை.

இதுவரை அரசியல் சட்டத்திலுள்ள முக்கிய குறை களை எடுத்துக் காட்டினோம். இனி, நாட்டைத் துண்டாடக் கோருவோரின் பக்கம் பார்வையைச் செலுத்துவோம்.

தமிழகம் வாழ்வாங்கு வாழவேண்டும் என்பதில், தமிழ னான எனக்கோ, தமிழக அமைச்சர்களுக்கோ இல்லாத அக்கரை டில்லியிலிருக்கும் 'பெரிய மனிதர்'களுக்கு இருப்ப தாகச் சொல்லுவது, தமிழ் மக்களை அவமதிப்பதாகும்.

மாநில மக்களைக் காக்கும் பொறுப்பினை 'டில்லி பெரு மான்'கள் சுமக்க வேண்டாம். அவர்களுடைய பாரத்தைக் குறைத்து விடும்பொருட்டே தமிழரசுக்கழகம் மாநில சுயாட்சி கோருகின்றது.

அயல் நாட்டுறவு, பாதுகாப்பு, போக்குவரத்து ஆகிய மூன்று அதிகாரங்களை மட்டுமே டில்லி வைத்துக் கொள்ளு மானால் மத்திய அரசின் நிர்வாகம் திறமையாக நடக்க இயலுமல்லவா !

# பிரிவினைக் கூச்சல்

மத்திய அரசியல் அதிகாரங்கள் குவிக்கப்பட்டிருப்பதால், தமிழ்நாடுமட்டுமே பாதிக்கப்படுவதாக எண்ணவேண்டாம். மாநிலங்கள் அனைத்துமே பாதிக்கப் பட்டுள்ளன. ஆகவே, அதிகாரக் குவியல் தமிழகத்திற்குமட்டும்தீங்கிழைப்பதாக இங்கு ஒரு சாரார் பிரச்சாரம் செய்து வருவது அறியாமை; அல்லது அறிந்தே சொல்லும் முழுப்பொய்! மத்திய அரசாங்கம் வடகோடியில் இருப்பதாலேயே, அது "வடவர் ஆட்சி" ஆகி விடாது. "வடக்கு வாழ்கிறது; தெற்கு தேய்கிறது" என்று சிலர் கோஷிக்கின்றனர். இது, அரசியல் நடைமுறைக்கே முரண்பட்டதாகும். மாநில வாரியாகப் பார்த்தால்தேய்கின்ற மாநிலம் வடக்கிலும் உண்டு;வாழ்கிற மாநிலம் தெற்கிலும் உண்டு.

## 'வாழ்வு'-'தேய்வு' வரலாறு

வடக்கிலே ராஜஸ்தான் மாநிலம் மிகப் பயங்கரமான பஞ்சப் பிரதேசமாகும். அதற்கு அடுத்த நிலையில் ஒரிசா ராஜ்யமும் அஸாம் மாநிலமும் பின்னடைந்த ராஜ்யங்களே. பஞ்சாப்-மத்தியப் பிரதேசம்கூட அநேகமாகப் பின்னடைந்த ராஜ்யங்களே. தென்னாட்டை மாநில வாரியாகப் பார்த்தால் கேரளம் பஞ்சப் பிரதேசம் எனலாம். உணவுதேடிக் கேரளர்

படும் தொல்லை உலகறிந்ததாகும். ஏன்? தமிழகத்தோடு ஒப்பிட்டுப் பார்த்தால், கேரளம்-கன்னடம்-ஆந்திரம் ஆகிய மூன்றும் பின் தங்கிய மாநிலங்களே.

ஆந்திரர் தனி ராஜ்யம் கோரிக் கிளர்ச்சி செய்ததால், 1953-ல் தமிழகத்தின் தொடர்பிலிருந்து ஆந்திரம் பிரிந்து போய்விட்டது. காரணம் என்ன? சென்னை ராஜ்யத்தில் "தமிழகம் வாழ்கிறது, ஆந்திரம் தேய்கிறது" என்று ஆந்திரர் அத்தனை பேரும் கூச்சலிட்டதுதான். கூச்சல் கோபமாக மாறி "அரவவாளந்த சாவால, ஆந்திர ராஜ்யம் காவால" என்றும் வெறி பிடித்துக் கத்தினர்கள். இதனை, 'தெற்கு தேய்கிறது' என்போர் மறந்திருக்க முடியாது. ஆம்; தேய்கிற மாநிலங்கள் வடக்கிலுமுண்டு: வாழ்கிற மாநிலங்கள் தெற்கிலுமுண்டு. இந்தியாவிலுள்ள மொத்த மாநிலங்களின் எண்ணிக்கை பதினன்கு. அவற்றில் எந்தத் துறையில் நோக்கினும், பம்பாய் — வங்காளம் — தமிழகம் ஆகிய மூன்றுமே முன்னேற்றத்தில் போட்டியிடுகின்றன. மற்றுள்ள பதினேரு ராஜ்யங்களும் இந்த மூன்றுக்குப் பின்னல்தான்.

## வடக்கு வாழ்வது யாரால்?

பம்பாய், கல்கத்தா, ஆமதாபாத் ஆகிய நகரங்களில் தொழில்கள் குவிக்கப்பட்டிருக்கலாம். அதனுலேயே வடக்கிலுள்ள எல்லா மக்களும் வாழ்வதாகச் சொல்லிவிட முடியாது. வறுமையும் வளமும் வடக்குக்கும் தெற்குக்கும் பொதுவானவைதாம். திக்குகளின் பெயரால் வாழ்வும் தாழ்வும் இல்லவே இல்லை. வர்க்கங்களின் பெயரால் அவற்றைக் காணலாம்.

பம்பாய்-வங்காளம் ஆகிய மாநிலங்கள் தொழில்துறைகளில் தமிழகத்தைவிட முன்னேறி இருக்கலாம். அதற்கு

இன்றுள்ள மத்திய ஆட்சியைக் குறை கூறுவதற்கில்லை. பிரிட்டிஷார் இந்தியாவை ஆண்ட காலத்திலேயே பம்பாயி லும் கல்கத்தாவிலும் தொழில்கள் குவிக்கப்பட்டன. வடக்கு வாழ்கிறது என்ற கூற்று உண்மையானால், அந்த நிலையைத் தோற்றுவித்த குற்றவாளிகள் பிரிட்டிஷார்தான். டாட்டா -பிர்லா - டால்மியாக்கள் ஆகஸ்டு 15-க்குப் பிறகு தோன்ற வில்லை. ஆங்கிலேயர் ஆட்சியிலேயே தோற்றுவிக்கப் பட்டு விட்டனர். ஆனால், இன்று வடக்கை வசைபாடும் கூட்டத்தார், வடக்கை வாழ வைத்த-தெற்கைத் தேய வைத்த பரங்கியர் ஆட்சிக்குப் பல்லாண்டு பாடினார்களே, ஏன் ?

உண்மை என்னவென்றால், விரல் விட்டு எண்ணி விடக் கூடிய அரை டஜன் டாட்டா-பிர்லாக்கள் மட்டுமே வடநாடு அல்ல. பல கோடி உழவர்களும் தொழிலாளர்களும் வட நாட்டில் உண்டு. அப்படிப் பார்த்தால், "வட நாட்டில் வர்த்தக-முதலாளி வர்க்கம் வாழ்கிறது;உழவர்-தொழிலாளர் வர்க்கம் தேய்கிறது" என்று தான் சொல்லவேண்டும். இந்த நிலை வடக்குக்கு மட்டுமல்லாமல், தெற்குக்கும் பொருந்தும். ஏன்?-ஒவ்வொரு மாநிலத்திற்கும் பொருந்தும்.

### ‘ஊடற் போர் !’

ஆகவே, மத்திய ஆட்சியில் அதிகாரங்கள் குவிக்கப் பட்டிருக்கும் கொடுமைக்குப் பரிகாரம், வடக்குக்கு எதிராகத் தெற்கு போராடுவதன்று! மத்திய அரசுக்கெதிராக மாநில அரசுகள் ஒன்றுகூடிச் சுயாட்சி கோரிப் போராடுவதாகும். அரசியல் வழிப்பார்த்தால் நம் எதிரே இருப்பது, வடக்கு தெற்குப் போராட்டமன்று; அல்லது, ஆரியர்-திராவிடர் பூசலுமன்று; மத்திய அரசுக்கும் மாநில அரசுகளுக்குமான "ஊடற்போர்" என்பது விளங்கும்.

'திராவிடத் தனி நாடு' கோருபவர்கள் "வடநாட்டைச் சுரண்டும் உரிமை வடநாட்டு முதலாளிகளுக்கே! தென்னகத்தைச் சுரண்டும் உரிமை தென்னாட்டு முதலாளிகளுக்கே" என்று சொல்லாமல் சொல்லுகின்றனர். 'வடக்கு வாழ்கிறது; தெற்கு தேய்கிறது' என்ற கோஷத்தின் உட்பொருள் இதுதான். சோஷலிச சித்தாந்தத்தில் நம்பிக்கை உடைய எவரும் இந்தக் கொள்கையை ஏற்க மாட்டார்கள், இந்தியாவிலிருந்து தமிழ்நாடு துண்டாடப்பட வேண்டும் என்று கூறுவோர், அதனை உறுதியான ஒரு லட்சியமாகக் கொள்ளவில்லை. கட்சி வளர்க்கும் தந்திரமாகவே கொண்டிருக்கின்றனர்.

## மூன்று கொடிகள் எதற்கு?

லட்சியத்தில் பற்று இருக்குமாயின், பிரிவினை கோரும் அவர்கள் ஒரே கொடியின் கீழ் நிற்பார்கள். பாரதத்துக்கு விடுதலை கோரிய தேசபக்தர்கள் ஒரே கொடியின் கீழ் நின்று பாடுபட்டதை நாம் கண்டிருக்கிறோம். ஓராண்டு, ஈராண்டு அல்ல; அறுபதாண்டுக் காலம்! அதுதான் விடுதலை வீரர்களின் இலக்கணம். ஆனால், வடக்கிலிருந்து தெற்குப் பிரிய வேண்டும் என்று கோருவோர் மூன்று கொடிகளின் கீழ் பிரிந்து கிடக்கிறார்கள். ஆம்; லட்சியம், வடக்கிலிருந்து பிரிவது; ஆனால், நடைமுறையோ தங்களுக்குள்ளே பிரிந்து சண்டை யிடுவது! எவ்வளவு விசித்திரமான அரசியல் வாதிகள்!

இன்று, "தென்னகத்தை வடநாடு அடிமைப்படுத்தி ஆளுகிறது" என்று கூறுவோர், அதற்காகத் துண்டாடப் பட்ட தனிநாடு கோருவோர், பிரிட்டிஷார் ஆண்ட காலத்தில் என்ன செய்தார்கள்? ஓராண்டு ஈராண்டு என்றில்லாமல் ஒரு தலைமுறை காலம் ஆங்கிலப் பேரரசை ஆதரித்தார்கள். கோடானு கோடி மக்கள் வெள்ளையர் ஆதிக்கத்தை

எதிர்த்து விடுதலைக்குப் போராடியபோது, இன்று பிரிவினை கோரும் கூட்டத்தார், அன்று பரங்கி அரசுக்குப் பல்லாண்டு பாடினார்கள்! இந்தச் சரித்திரத்தை அவர்கள் மறைக்கவோ, மறுக்கவோ முடியாது.

## தருணம் தவறி விட்டது!

இவ்வளவும் நான் கூறக் காரணம் பிரிவினை கோருவோரின் சுதந்திர உணர்ச்சியில் எனக்குள்ள சந்தேகத்தை வெளிப்படுத்தத்தான். பிரிவினை கோரும் "பெரியார்"களுக்கே தெரியும், அது நிறைவேற முடியாத கோரிக்கை என்று. 'அறிஞர்'களும் இந்த உண்மையை அறிவார்கள். அதனாற்றான், பிரிவினைக்காக நேரடிப் போராட்டத்தில் ஈடுபட அவர்கள் துணியவில்லை—துணியமாட்டார்கள். ஒரு தேசம் துண்டாடப்படுவது இரண்டு சந்தர்ப்பங்களில்தான். ஒன்று அடிமைப்படுத்திய அன்னியன் வெளியேறும் சந்தர்ப்பம். அப்படிப்பட்ட ஒரு சந்தர்ப்பத்தில்தான் அயர்லாந்து துண்டாடப்பட்டது; இந்தியாவிலிருந்து பாகிஸ்தான் பிரிக்கப்பட்டது. மற்றொன்று, யுத்தத்தில் ஈடுபட்டு அன்னியரிடம் தோல்வி அடைந்த சந்தர்ப்பம். அதுபோன்ற ஒரு நேரத்தில் தான் கொரியா-ஜெர்மனி-இத்தாலி ஆகிய நாடுகளை வெற்றி பெற்ற வல்லரசுகள் பங்கு போட்டுக் கொண்டன.

இந்தியாவில் இப்போது அன்னிய ஆட்சி நடைபெறவில்லை. இங்கு மங்குமாகச் சிற்சில குறைகள் இருப்பினும் சுதந்திர ஆட்சியே நடைபெறுகின்றது. ஆகவே, இனி, தேசம் துண்டாடப்படுவதற்குச் சந்தர்ப்பமே இல்லை. ஆகவே, உண்மையானதும், லட்சிய வாதிகளால் ஆதரிக்கப்படுவதும், வெற்றி பெறுவதற்குச் சந்தர்ப்பமுள்ளதுமான ஒரே கோரிக்கை **மாநில சுயாட்சி**தான். அந்தக்

கோரிக்கைக்கு வெற்றி தேடத் தமிழகத்திலுள்ள எல்லாக் கட்சிகளும் ஒன்றுபட வேண்டியது அவசியம்.

## தேர்தல் பிரச்சனையாகும்

அடுத்த பொதுத் தேர்தலுக்குள் தமிழகத்தின் மூலை முடுக்குகளிலெல்லாம் சுயாட்சிப் பிரச்சாரம் நடத்த எண்ணியிருக்கிறேன். மாநில சுயாட்சிக் கொள்கையிலும் அதற்கு எதிரான பிரிவினைக் கோரிக்கையிலும் உள்ள நன்மை - தீமைகளை மக்கள் எல்லோருமறிய எடுத்துரைப்போம். மக்களை நமது கோரிக்கைக்குத் திருப்பிவிட்டால், பிரிவினை கோருவோரும் திருந்தி விடுவது திண்ணம்.

எப்படியும் அடுத்த பொதுத் தேர்தலில் சுயாட்சிக் கோரிக்கை தேர்தல் பிரச்சனையாவது திண்ணம். நம்மைப் பற்றி, நமது கொள்கைபற்றி காங்கிரஸ்காரர்கள் இன்று அலட்சியமாக இருக்கலாம். மந்திரிகள் மவுனம் சாதிக்கலாம். பிரிவினை கோருவோர், இன்று நம்மை எள்ளி நகையாடலாம். ஆனால், இன்னும் ஐந்தே ஆண்டுகளில் நமது லட்சியம் வெற்றி பெறப்போவது திண்ணம்.

# சுதந்திரப் போரும் சுயாட்சியும்

இந்திய சுதந்திரப் போராட்டம், மொழிவழி நாடுகளின் சுதந்திரத்தையும் எதிரொலி செய்யும் வகையில்தான் நடைபெற்றதாக நான் கருதுகின்றேன். **இந்திய தேசியக் காங்கிரஸ்** என்பது, விடுதலை ஆர்வம் கொண்ட மொழிவழித் தேசிய இனங்களின் **யுத்த சபை**யாகத்தான் தோன்றியது; அந்த அடிப்படையில்தான் 1930-வரை செயல்பட்டது.

## வங்கப் பிரிவினையை எதிர்த்ததேன்?

விடுதலைப் போராட்டம் நடந்துகொண்டிருந்த பொழுது வங்கமொழி வழங்கும் மாநிலத்தை, இரண்டாகத் துண்டாடினர் ஆங்கிலேயர். இந்து வங்கம் - முஸ்லிம் வங்கம் எனக் கூறு போட்டனர். அந்தக் கொடுமை கண்டு வங்க தேசிய இனத்தார் நெஞ்சம் குமுறினர். "வங்கம் வங்காளியரின் தாயகம்; அதைப் பிளக்காதே" என்று கோஷித்தனர். வங்கம் மதவழிப் பிளக்கப்பட்டாலும், பிளவுபட்ட இரண்டு பிரதேசங்களும் இந்தியாவின் உள் மாநிலங்களாகத்தான் இருந்திருக்கும். ஆம்; வங்கப் பிரிவினையால் இந்தியாவின் ஐக்கியம் குலைந்திருக்காது. அப்படி இருந்தும், காங்கிரஸ், அன்று வங்கப் பிரிவினையை எதற்காக எதிர்த்தது? வங்காளியரின் ஒற்றுமையும் உரிமை வாழ்வும்

பாதிக்கப்படக் கூடாது என்பதற்காகத்தானே காங்கிரஸ் வங்கப் பிரிவினையை எதிர்த்தது. "இந்தியா" என்பது இந்து-முஸ்லிம் மதங்களின் கூட்டு முகாம் அன்று. மொழிவழி தேசிய இனங்களின் தாயகங்களைக் கொண்ட ஓர் உபகண்டம். இந்த உண்மையைத் திலகர் காலத்துக் காங்கிரஸ் உணர்ந்திருந்தது; உளமார ஒப்புக்கொண்டது. அதனுற்றுன், வங்கப் பிரிவினையை எதிர்த்துப் பாரத தேசம் முழுவதையும் போர்க்களமாக்கியது காங்கிரஸ்.

லோகமான்ய திலகர்தான் மாநில காங்கிரஸ் குழுக்களை மொழிவழிப் பிரதேசங்களாகத் திருத்தி அமைக்கத் தூண்டினுர். அதற்கான ஒரு தீர்மானத்தைக் காங்கிரஸ் மகா சபையில் பிரேரேபித்ததும் திலகர் பெருமானே!

## மதவழி 'தேசப் பிரிவினே!'

ஆனுல், துரதிருஷ்ட வசமாகப் பிரிட்டிஷாரின் தூண்டுதலால் இந்தியாவில் இந்து-முஸ்லிம் பூசல் தோன்றியது. மதவழி உரிமை கோரும் உணர்வு மக்களிடையே திட்டமிட்டு வளர்க்கப்பெற்றது. அது காரணமாக, காங்கிரசிலும் 'இந்து தேசியம்'-'இஸ்லாமிய தேசியம்' என்ற பிரிவினை பிறந்தது. இந்த வகுப்புவாத மனப்பான்மையை வளர்க்க முஸ்லிம் லீக், இந்து மகாசபை என்ற அமைப்புகளும் எழுந்தன. பின்னர், இந்து-முஸ்லிம் வகுப்புவாதப் பூசல் அரசியல் போராட்டமாகவும் உருவெடுத்தது. இந்தக் கொடுமையால், வடக்கே மொழிவழி இன உணர்ச்சியை மிகுதியாகப் பெற்றிருந்த வங்காளியர் இடையேயும் மத வெறி தலை தூக்கியது. இதனைச் சமாளிக்க, 'இந்து-முஸ்லிம் ஏக்ஹோ', 'வந்தே மாதரம்'-'அல்லாஹு அக்பர்' என்ற ஒற்றுமைக் கோஷங்களைத் தோற்றுவித்தது காங்

கிரஸ். ஆனால், இவையனைத்தும் பலனளிக்கவில்லை. விடுதலைப் போர் வெற்றி பெறுமென்ற நம்பிக்கை தோன்றி விட்ட கட்டத்தில், இந்துஸ்தான்-பாகிஸ்தான் என்ற இரு நாட்டுச் சித்தாந்தங்கள் பிறந்தன. அந்தச் சித்தாந்தங்களிடையே சமரசம் ஏற்படுத்தக் காங்கிரஸ் எடுத்துக் கொண்ட முயற்சிகளும் தோல்வியுற்றன. இறுதியில், 1947 - ஆகஸ்டு 15-ல் நாடு பாரதம்-பாகிஸ்தான் என இரண்டாகத் துண்டாடப்பட்டது.

## இனவழி மனமாற்றம்

நாடு மதவழித் துண்டாடப்பட்ட பிறகே பாரத மக்கள் உண்மை நிலையை உணர்ந்தனர். மதவழி தேசிய உணர்ச்சி மறைந்து மொழிவழி இனஉணர்ச்சி திரும்பவும் தலை எடுக்கத் தொடங்கி விட்டது. அந்த உணர்ச்சிக்குக் கிடைத்த முதல் வெற்றி, 1956-நவம்பர் 1-ல் நடைபெற்ற ராஜ்யப் புனரமைப்பு ஆகும்.

தமிழ் மக்களாகிய நாம் காங்கிரஸ் மகா சபையில் சேர்ந்து இந்திய விடுதலைக்காகப் போராடினோம் என்றால், அந்த விடுதலையின் மூலம்தான் தமிழகமும் விடுதலை பெற முடியும் என்று நம்பியதே காரணம். ஆகவே, தமிழரைப் பொறுத்த வரையில், விடுதலைப் போர் இன்னமும் முடியவில்லை. அது, 1947 ஆகஸ்ட் 15-க்குப் பிறகும் தொடர்கிறது. இந்த உண்மையை 1-8-47 'தமிழ் முரசு' இதழின் தலையங்கத்திலேயே கூறியிருக்கிறேன்.

"ஆகஸ்டுப் பதினைந்துக்குப் பிறகு போர் முனை மாறுகிறது, போர் முறை மாறுகிறது; ஆனால், போர் நிற்கவில்லை." என்று கூறினேன். அதையே இன்றும் கூறுகிறேன்.

1947 ஆகஸ்ட் 15-ல் ஏனைய மொழிவழி மாநிலங்களைப்போல தமிழ் மாநிலமும் ஆங்கிலேயர் பிடியிலிருந்து விடுதலை பெற்றது. அந்த விடுதலை நாளைத் தமிழரசுக் கழகத்தாராகிய நாமும் அன்றே கொண்டாடினோம். இன்றுவரை கொண்டாடி வருகிறோம்; இனியும் கொண்டாடுவோம்.

## கடமையைச் செய்தோம்; உரிமையைக் கேட்கிறோம்!

பிரிட்டிஷாரை எதிர்த்து நடந்த விடுதலைப் போரில் தமிழரசுக் கழகத்தாராகிய நாமும் கலந்து கொண்டோம்; கடமையைச் செய்தோம். அந்தச் சாதனையைக் காட்டியே இன்று தமிழினத்தாரின் உரிமைக்காகப் போராடுகிறோம். ஆம்; தமிழரசு இயக்கம், தமிழ் இனத்தவரின் சுதந்திரத்திற்குப் பாடுபடும் விடுதலை வீரர்களின் பாசறை!

தி. க—தி. மு. க. அமைப்புகளும், தமிழகத்திற்கு 'விடுதலை' கோரலாம். ஆனால், அது பாதுகாப்பற்ற விடுதலை. இந்திய சமஷ்டியில் சம அந்தஸ்துடன் கூடிய சுயாட்சித் தமிழகம் கோருகிறோம் நாம். அதுதான் பலமான பாதுகாப்பைக் கொண்ட சுதந்திரத் தமிழகம்!

தமிழரசுக் கழகத்தாராகிய நாம் காணும் லட்சியத் தமிழகம் எத்தகையது? இதோ சித்திரம் தீட்டிக்காட்டுகின்றேன்:

> தமிழரசுக் கழகத்தின் அரசியல் பார்வையில் தமிழகம் சர்வ சுதந்திரமுள்ள தனி நாடுதான். அப்படியே ஆந்திரம், கன்னடம், வங்கம், மராத்தி ஆகிய மாநிலங்களும் சுதந்திர நாடுகளாக இருக்க உரிமை உண்டென்பதே நம் கொள்கை. ஆனால், வளர்ந்து விட்ட உலக வல்லரசுகளின் கழுகுப் பார்வையிலிருந்து தப்ப சுதந்திர மாநிலங்களுக்குத் தக்க பாதுகாப்பு

வேண்டும்; போதிய படை பலம் வேண்டும். அதற்காகவே, இந்தியாவிலுள்ள மொழிவழி மாநிலங்கள் - சுதந்திர அரசுகள் ஒன்று கலந்த **சமஷ்டிஅரசு** அமைய வேண்டுமென்று நாம் கூறுகிறோம்.

## பெரிய சமஷ்டி வேண்டும்

திராவிட நாடு கோருவோரும், தமிழகம்-ஆந்திரம்-கன்னடம் - கேரளம் ஆகிய நான்கு மொழி நாடுகளின் சமஷ்டியைத்தான் விரும்புகின்றனர். அந்த சமஷ்டியில் வடக்கே இருக்கும் மாநிலங்களையும் சேர்த்துக் கொண்டால் பாதுகாப்புப் பலமுடையதாக இருக்குமென்று நாம் கூறுகிறோம்.

தேவிகுளம்-பீருமேடு பகுதிகளைப் பறித்துக்கொண்ட கேரள இனத்தவரோடு தமிழர் சமஷ்டி சேரலாம் என்றால், வடக்கெல்லைப் பகுதிகளைத் தரமறுத்த ஆந்திரத்தோடு தமிழகம் சமஷ்டி சேரலாம் என்றால், வடக்கே உள்ள மாநிலங்களையும் அந்த சமஷ்டியில் சேர்த்துக் கொள்வதால் தமிழுக்கும் தமிழருக்கும் என்ன கேடு நேர்ந்துவிடுமோ!

ஆம்; திராவிடத் தனிநாடு கோருவோர், இன்றுள்ள இந்திய யூனியன் ஏக அரசுமுறையை எதிர்க்கலாம்; தனித் தமிழ் நாடு கூச்சலை வெறுக்கலாம். ஆனால், உரிமையோடு கூடிய தமிழகம் சம அந்தஸ்தில் பிற மாநிலங்களோடு உறவு கொள்ள வேண்டுமென்ற நமது கொள்கையை எதிர்ப்பதற்கில்லை. தி. மு. க. கோரும் திராவிடநாடு சிறிய சமஷ்டி; தமிழரசுக் கழகம் காணும் ஐக்கிய இந்தியா பெரிய சமஷ்டி - அவ்வளவுதான். மொழிவழி நாடுகள் சமஷ்டி சேருவதை ஒப்புக்கொண்டு விட்டால், அது பெரியதாக இருக்க வேண்டும் என்பதை எதிர்ப்பதில் அர்த்தமில்லை.

# நமது லட்சியச் சித்திரம்

நம்முடைய கொள்கைப்படி அமையவிருக்கும் சமஷ்டி அரசுக்கு உரிய பொறுப்புக்கள் யாவை?-என்று கேட்கலாம். அவை, (1) அயல் நாட்டு உறவு (2) ராணுவம்-அதாவது, பாதுகாப்பு (3) போக்கு வரவு.

இம் மூன்று பொறுப்புகளும் சமஷ்டி அரசிடம் விட்டு வைக்கப்படும். இவை, சமஷ்டி அரசாங்கம் மாநிலங்களிட மிருந்து பறித்துக்கொண்ட பொறுப்புக்கள் அல்ல. மாநில அரசுகளே தத்தம் பாதுகாப்பைக் கருதிச் சமஷ்டி அரசிடம் கொடுத்து வைப்பவை. இப்படிக் கொடுத்து வைப்ப தானது, மத்திய அரசுக்குத் தமிழகம் அடிமைப்படுவது போல் ஆகாது. தமிழகம் எந்தெந்த அதிகாரங்களை மத்திய அரசிடம்கொடுத்து வைக்கின்றதோ, அதே அதிகாரங்களை மற்ற மாநிலங்களும் மத்திய அரசிடம் கொடுத்து வைக் கின்றன என்பதை மறந்துவிடக் கூடாது. மூன்று அதிகாரங்களை மத்திய அரசிடம் கொடுப்பதால் தமிழகம் அடிமைப் படுகிறதென்றால், மற்ற மாநிலங்களும் தமிழகம் போலவே அடிமைப்படுகிறதென்று சொல்லலா மல்லவா? அப்படி எல்லா மாநிலங்களுமே மத்திய அரசுக்கு அடிமைப் படுமானல், அப்போது அடிமைப் படுத்திய நாடோ, இனமோ எதுவென்று பிரிவினை கோருவோர் சொல்ல முடியுமா?—முடியாதே!

## மத்திய அரசு எல்லோருக்கும் பொது

'மத்தியஅரசு' என்பது, ஒரு கூட்டு ஸ்தாபனம் ஆகும். எந்த எந்த மாநிலங்கள் மத்திய அரசில் சேருகின்றனவோ அந்த அந்த மாநிலங்களின் பிரதிநிதிகளே மத்திய அரசை நிர்வகிப்பார்கள். இப்போதும், மத்திய அரசு அப்படித் தான் நடைபெறுகின்றது.

ஆனால், மக்கள் தொகை கூடுதலாக இருப்பதன் காரணமாக உத்தரப் பிரதேசத்தார் மத்திய பார்லிமெண்டில் செல்வாக்குப் பெற்றுவிடுவார்கள்; அதன் மூலம் மத்திய அமைச்சர் குழுவையும் கைப்பற்றிக்கொண்டு மற்ற இனத் தவர்மீது ஆதிக்கம் செலுத்துவார்கள்-என்று சொல்லலாம். இன்றே அந்த நிலை இருப்பதாகவும் சான்று காட்டலாம். எனது லட்சிய பாரதம், இன்றுள்ள பாரதத்திலிருந்து முற்றிலும் மாறுபட்டதென்பதை இங்கு சொல்லிக் கொள்ள விரும்புகின்றேன். இன்றையப் பார்லிமெண்டிற்கு மக்கள் தொகை அடிப்படையில் பிரதிநிதித்துவம் வழங்கப்பட்டிருக்கிறது. அதனால், ஆறுகோடி மக்களைக் கொண்ட உத்தரப் பிரதேசம் மற்ற ராஜ்யங்களைத் தனித் தனியே நோக்கும் போது அதிகப்படியான பிரதிநிதிகளைப் பார்லிமெண்டிற்கு அனுப்பியிருக்கிறது. மொழி அடிப்படையில் பார்த்தாலும் இந்தி மொழியாளரே நாற்பது சதவிகித அளவில் பார்லிமெண்டில் இடம் பெற்றிருக்கின்றனர். இது, இன்றையப் பார்லிமெண்டின் நிலை.

## சமப் பிரதிநிதித்துவம்

நமது லட்சியத்திலுள்ள பாரதப் பார்லிமெண்டில் மாநிலங்களுக்குச் சம அளவில் பிரதிநிதித்துவம் வழங்கப் படும். அதாவது, சுமார் ஒரு கோடி ஜனத்தொகையுடைய

கேரளத்திற்குப் பத்துப் பிரதிநிதிகள் பார்லிமெண்டில் இருப்பார்களானல், ஆறு கோடி ஜனத்தொகையுடைய உத்தரப் பிரதேசத்திற்கும் பத்துப் பேர்தான் இருப்பார்கள். ஆம், ஒரு ராஜ்யத்திற்குக் கூடுதலான பிரதிநிதிகள், இன்னொரு ராஜ்யத்திற்குக் குறைந்த அளவில் பிரதிநிதிகள் என்ற நிலை இருக்காது. ஆகவே, நமது லட்சிய பாரதத்தின் பார்லிமெண்டில் எந்த ஒரு இனத்தவரும் பிற இனங்கள் மீது ஆதிக்கம் செலுத்த முடியாது. லட்சிய ரீதியான அரசியல் கட்சி வழிச் செல்வாக்கே பார்லிமெண்டில் மாறி மாறி இடம் பெறும்.

இப்போதுள்ள மத்திய அரசில்கூட விடுதலைபெற்ற நாள் தொட்டு, குறிப்பிட்ட ஒரு இனத்தவரே ஆதிக்கம் செலுத்தி வருகிறார்கள் என்று சொல்வதற்கில்லை. பண்டித நேரு தொடர்ந்து பிரதமர் பதவியில் இருந்து வருவதற்குக் காரணம் அவர் உத்திரப் பிரதேசத்தவர் என்பதன்று. இந்தியவிடுதலைப் போரில் அவர் எடுத்துக் கொண்ட பங்கும், முற்போக்கான பாதையில் அவர் நடைபோட்டுச் செல்லுவதுமே, தொடர்ந்து அவர் பதவியிலிருப்பதற்கான காரணங்களாகும்.

## இன்றும் பதவிகளுக்குக் குறைவில்லை

மத்திய பார்லிமெண்டில் இந்தி மொழியாளர் செல்வாக்குப் பெற்றுள்ள இன்றைய நிலையிலும் தமிழர் முற்றிலும்புறக் கணிக்கப்பட்டு விட்டதாகச் சொல்வதற்கில்லை. இந்தியாவின் கவர்னர் ஜெனரல் பதவியை முதன் முதலாக அடைந்த இந்தியப் பெருமகனார் தமிழரான ராஜாஜிதான் என்பதை மறப்பதற்கில்லை. பண்டித நேருவின் தலைமையில் அமைந்த முதல் மந்திரி சபையில் தலைவர் ராஜாஜி—டாக்டர் ஆர். கே. சண்முகம்—சர். என். கோபாலசாமி ஐயங்கார் ஆகிய

மூன்று தமிழர்கள் ஏககாலத்தில் அமைச்சர் பதவி வகித்தார்கள் என்பதை மறப்பதற்கில்லை. போலீஸ், நீதி, பாதுகாப்பு, கல்வி, தொழில், வர்த்தகம் ஆகிய முக்கிய இலாகாக்களை இவர்கள் நிர்வகித்தார்கள் என்பதும் கவனத்தில் கொள்ளத்தக்கதாகும்.

விடுதலை பெற்ற இந்தியாவின் ராணுவத் தளபதி பதவிக்கு முதன்முதலாக வந்த மேஜர் கரியப்பா தென்னிந்தியர் தான். இன்று தளபதியாகவுள்ள ஜெனரல் திம்மையாவும் தென்னிந்தியர்—திராவிடர் !

## அயல் நாடுகளிலும் 'நாம்'

ருஷ்யா, சீனம் ஆகிய இருபெரும் நாடுகளில் இந்தியத் தூதுவர்களாக பணிக்கர், சர்.எஸ்.இராதாகிருஷ்ணன் ஆகிய தென்னிந்தியர்கள் பணி புரிந்திருக்கின்றனர். இப்போதும் எத்தனையோ நாடுகளில் தென்னிந்தியர் பலர் இந்தியாவின் தூதுவர்களாகப் பணி புரிகின்றனர்.

இன்றைய உலக அரசியல் விஷயங்களில் இந்தியாவின் சார்பில் ஐ. நா. மன்றத்தில் குரல் கொடுக்கும் பேறு பெற்றிருப்பவர் தென்னிந்தியரான வி. கே. கிருஷ்ண மேனன் ஆவார். சர்வதேச அரசியல் அரங்கில் திரு.கிருஷ்ணமேனன் செல்வாக்குப் பெற்றிருப்பது ஒரு கோடி மக்களைக் கொண்ட கேரளத்தின் புதல்வர் என்பதாலன்று. முப்பத்தேழு கோடி மக்களுடைய பாரதத்தின் பிரதிநிதி என்பதாலாகும், இவருக்கு முன்னர் அந்தப் பதவியில் இருந்த பெனகல் நரசிங்கராவ் என்பவரும் தென்னிந்தியரேயாவார்.

மற்றும், மத்திய பாராளு மன்றத்தின் சபாநாயகர் பதவியி லிருப்பவர், தென்னிந்தியரான அனந்தசயனம் ஐயங்கார்.

உதவி ஜனாதிபதி பதவியில் இருக்கும் சர். எஸ். இராதாகிருஷ்ணன், திருத்தணியைச் சேர்ந்தவராவார்.

## சுதந்திரம், தமிழர் பிறப்புரிமை!

பொதுவாகச் சொன்னால், தமிழகம் அல்லது தென்னகம் எவ்வளவுக் கெவ்வளவு சிறந்தவர்களைப் பார்லிமெண்டிற்கு அனுப்பியதோ, அவ்வளவுக் கவ்வளவு உயர்ந்த—சிறந்த பதவிகளையும் அவர்களுக்கு வழங்கியிருக்கின்றது மத்திய அரசு. இங்கு ஒரு விஷயத்தைத் தெளிவுபடுத்த விரும்புகின்றேன். மாநில சுயாட்சிக்கோரிக்கை நமக்குள்ள குறைபாடுகளின் எதிரொலியன்று; மத்திய அரசின்மீது கொண்ட கோபத்தின் விளைவாகவும் நமது கோரிக்கை பிறக்கவில்லை. தமிழகத்தின் சுதந்திரம் தமிழ் இனத்தவரின் பிறப்புரிமை! மத்திய அமைச்சர்கள் அத்தனை பேரும் தமிழர்களாகவே இருக்க நேர்ந்தாலும் சரி; நமது பிறப்புரிமையான சுதந்திரக் கோரிக்கையை நாம் கைவிட முடியாது.

## சிறிய நாடுகளின் கதியைப் பார்!

நாம் விரும்பும் இந்திய சமஷ்டி மூன்று அதிகாரங்களை மட்டுமே உடையது ஆதலால், மாநிலங்கள் மீது டில்லி ஆதிக்கம் செலுத்தும் என்ற அச்சத்திற்கே இடமில்லை. மத்திய அரசிடம் நாம் விட்டு வைக்கும் மூன்று பொறுப்புக்களின் வருவாய் மிக மிகக் குறைவு; செலவு மிக மிகக் கூடுதல். ஆகவே, நமது லட்சிய சமஷ்டி அரசைப் பொருள் கொடுத்துப் போஷிக்க வேண்டிய பொறுப்பு, மாநிலங்களுக்கு ஏற்படும். அதற்கான பொருளாதார பலமும் அப்போது மாநிலங்களுக்கு இருக்கும்.

ஆகவே, மூன்று பொறுப்புக்களை மத்தியிடம் விட்டு வைப்பதால், மாநிலங்களின் செல்வ நிலை சிறிதளவும் பாதிக்காது. இப்போதுள்ளதைவிட இன்னும் செழிப்பாக இருக்கும். தமிழகம் தனித்திருக்குமானுல், ராணுவம் தனியாக வைத்திருக்க வேண்டும். தமிழகத்தின் ஜனத் தொகை மூன்று கோடிக்கும் குறைவானது. அந்தத் தொகைக்கு ஏற்பத்தான் தமிழக ராணுவ வீரர்களின் எண்ணிக்கையும் இருக்கும். அந்தச் சிறிய ராணுவத்தைக் கொண்டு பெரிய வல்லரசுகளின் ஆதிக்க வெறியிலிருந்து தமிழகம் தன் சுதந்திரத்தைக் காத்துக்கொள்ள முடியுமா? "உலகில் தமிழகத்தைவிடச் சிறிய நாடுகள் தனியாக இல்லையா?" என்று கேட்கலாம்; தனித்திருப்பது உண்மை தான். ஆனுல், சுய பலத்தைக் கொண்டு சுதந்திரத்தைப் பாதுகாத்துக்கொள்ள அந்த நாடுகளால் முடிகிறதா?

## பாகிஸ்தானைப் பார்!

'சீட்டோ'—'நாட்டோ'—'அட்லாண்டிக்'—'பாக்தாத்' என்ற பெயர்களில் ஏற்பட்டுள்ள கூட்டுக்கள் எல்லாம் வல்லரசுகளின் முகாம்கள்தானே! அந்தக் கூட்டுக்களில் சேர்ந்துள்ள சின்னஞ் சிறுநாடுகள், ஏதேனும் ஒரு வல்லரசின் விருப்பப்படிதானே ஆடுகின்றன. அதன் பெயர்தான் சுதந்திரமா?

'இஸ்லாமிய தேசியம்' பேசித் தனிநாடு பெற்ற பாகிஸ்தானியர், எகிப்து தாக்கப்பட்டபோது என்ன செய்தனர்? பாகிஸ்தான் - எகிப்து ஆகிய இரண்டுமே இஸ்லாமிய நாடுகளாக இருந்தும், எகிப்து தாக்கப்பட்டபோது தாக்கிய பிரிட்டனையே ஆதரித்தது பாகிஸ்தான். மனச்சாட்சிப் படியா?—இல்லை. அதற்குள்ள அரசியல் சூழ்நிலை அப்படி!

'சுதந்திரம்' என்ற பெயரால் தனித்திருக்கும் சிறிய நாடுகள் எல்லாவற்றினுடைய நிலைமையும் இதுபோலத் தான்.

## பாரதத்தின் தனித் தன்மை

இந்தியா மிகப் பெரிய நாடாக இருப்பதால்தான், வல்லரசுகளின் கெடுபிடிப் போரில் சிக்காமல், ராணுவக் கூட்டுக்களில் சேராமல், வெற்றிகரமாக நடுநிலைமை வகிக்க அதனல் முடிகிறது. உலகில் வேறெந்தச் சிறிய நாட்டிற்கும் அத்தகைய துணிவில்லை; இருக்கவும் முடியாது. தமிழ் நாடோ, இந்தியாவிலுள்ள பிற மாநிலங்களோ, தனித் திருக்க விரும்பினல் அவற்றிற்கு அந்த உரிமை உண்டு. ஆனல், 'உரிமை வாழ்வு' என்பது தற்கொலையில் முடிந்து விடக்கூடாது. அதற்காகவே, மாநிலங்களுக்குரிய ராணுவப் பொறுப்பு மத்தியில் ஒப்புவிக்கப்பட வேண்டும் என்கின் றேன். தமிழகம், தெற்கு—கிழக்கு திக்குகளில் கடல்நீரை அரண்களாகக் கொண்டுள்ளது. மற்றுள்ள வடக்கு-மேற்கு திக்குகளில், சகோதர தேசிய இனங்களின் தாயகங்கள் இருக்கின்றன. அந்த இனங்களோடும் பகைகொண்டுவிட் டால், தமிழகத்தின் சுதந்திரத்திற்குப் பாதுகாப்பு மிக மிகக் குறைவு. ஆகவே, எப்படிப் பார்த்தாலும் இந்திய மாநிலங் களின் பாதுகாப்புப் பொறுப்பை சமஷ்டி அரசிடம் விட்டு வைப்பதே நலம்.

## உலகின்முன் இந்தியா ஒரே நாடு!

'அயல் நாட்டு உறவு'ப் பொறுப்பும் மத்திய அரசுக்குத் தரப்பட வேண்டும் என்பது தமிழரசுக் கழகத்தின் கொள்கை. இன்றைய உலகின் அரசியல் சூழ்நிலையை

அறிந்த எவரும், இந்தக் கருத்தை ஏற்றுக் கொள்வது திண்ணம். 'ஆயிரம் உண்டிங்கு சாதி—எனில், அன்னியர் வந்து புகல் என்ன நீதி'—என்றூர் பாரதியார். அதுபோல, இந்திய சமுதாயம் பல்வேறு மொழிகளைப் பேசும் வெவ்வேறு தேசிய இனங்களைக் கொண்டதாக இருக்கலாம். ஆனால் உலக அரசியல் அரங்கில் நாம் ஒரே பிரதிநிதியின் மூலம் நமது கருத்தை வெளிப்படுத்த வேண்டும். 'முப்பது கோடி முகமுடையாள் உயிர் மொய்ம்புற ஒன்றுடையாள்' என்று பாரதத்தை வருணித்தார் பாரதியார். அதுபோல, இந்தியா வில் பதினைன்கு ராஜ்யங்கள் இருக்கலாம். ஆனால், அமெரிக்க ஐசனேவர் துரையிடம் இந்தியா ஒரே குரலில்தான் பேச வேண்டும். அது, கேரளத்து மேனன் குரலாக இருக்கலாம்; தமிழகத்து முதலியார் குரலாக இருக்கலாம். அல்லது உத்தரப் பிரதேசத்து விஜயலட்சுமியின் குரலாகவும் இருக்க லாம்: இனம் எதுவாயினும், நபர் ஒருவர்தான் என்ற நிலையில் அயல் நாடுகளோடு இந்தியா உறவுகொள்ள வேண்டும்.

## போன மச்சான் திரும்பி வருவான்!

மூன்று கோடித் தமிழர்களாக உலகத்தோடு உறவு கொள்வதைவிட, முப்பத்தேழு கோடி இந்தியர்களாக உலகத்தை அணுகுவதில் நமக்குப் பாதுகாப்பு இருக்கின் றது. இல்லையேல், பிரித்தாளும் தந்திரத்தில் திறமை பெற்றுள்ள வல்லரசுகள் பாரதத்தைப் பல கூறுகளாக்கி விடும். திரும்பவும், 'போன மச்சான் திரும்பி வந்தான் பூ மணத்தோடே' என்பதுபோல, ஏதேனும் ஒரு வல்லர சுக்கு நாம் அடிமைப்பட வேண்டியதுதான். அந்த அபா யத்திலிருந்து தப்புவதற்கான ஒரேவழி, மொழிவழி மாநிலங்கள் 'அயல் நாட்டு உறவு' என்ற பொறுப்பை மத்திய சமஷ்டியிடம் கொடுப்பதுதான்.

## போக்கு வரத்து நடுவிடத்தில்

"போக்கு-வரத்து"க்கான பொறுப்பும் மத்திய சமஷ்டி யிடம் விட்டுவைக்கப்பட வேண்டுமென்பது தமிழரசுக் கழகத்தின் கொள்கை. ஆம்; மத்திய சமஷ்டி அமைவதை ஆதரித்து விட்ட பிறகு, அயல் நாட்டு உறவு-பாதுகாப்பு ஆகிய இரண்டு பொறுப்புகளையும் சமஷ்டி அரசிடம் விட்டு வைக்கச் சம்மதித்த பின்னர், போக்கு -வரத்தையும் சமஷ்டி யிடம் விட்டுவைக்கத்தான் வேண்டும். அதனைத் தவிர்ப்பது சாத்தியமில்லை.

'போக்கு - வரத்து'க்கான பொறுப்பை இரண்டு கோணங்களிலிருந்து ஆராய வேண்டும். ஒன்று பாதுகாப்பு; மற்றொன்று, சிக்கனமான நிர்வாகம்.

வெளியாரின் தாக்குதலி லிருந்து பாரதத்தைக் காக்க வேண்டிய சந்தர்ப்பம் ஏற்படும்போது, ரெயில்—விமான சர் வீசும் பாதுகாப்புப் பொறுப்போடு இணைந்து செயல்பட வேண்டியது அவசியமாகி விடுகிறது. இதற்கு மாறாக, போக்கு-வரத்துப் பொறுப்பு மாநிலங்களிடம் விடப்படுமானால் வெளி அபாயம் ஏற்படுகின்ற சமயத்தில், இந்திய ராணுவம் திறமையாகவும், விரைவாகவும், வெற்றிகரமாகவும் செயல் பட முடியாது. பாதுகாப்புக்கும், போக்கு - வரத்துக்கும் பிரிக்க முடியாத பிணைப்பு உண்டு.

மாநிலங்களின் பொருளாதார நலனைக் கவனத்தில் கொண்டாலும், 'போக்கு - வரத்து' சமஷ்டி அரசிடம் இருப்பதே நன்மை பயக்கும். குறைந்த செலவில் - சிறந்த சாதனங்களோடும், திறமையான நிர்வாகத்தைப் பெற்றும் போக்கு - வரத்து சர்வீஸ் நடைபெற, அந்தப் பொறுப்பு மாநிலங்கள் அனைத்தினுடைய கூட்டு நிர்வாகத்தில் இருப்

பதே நல்லது. இரண்டு துண்டுப் பிரதேசங்களாகப் பிரிந்து கிடக்கும் பாகிஸ்தானைப் போலல்லாமல், தொடர்ந்தாற் போல் உள்ள நிலப்பரப்பாக விளங்குகிறது பாரதம். அதனுலும், போக்கு-வரத்தைச் சமஷ்டியிடம் விட்டுவைத்தல் சாத்தியமாகிறது.

## சுதந்திர அந்தஸ்து அங்கீகரிக்கப்பட வேண்டும்

இந்திய மாநிலங்கள் சமஷ்டி சேரவேண்டும்; பாதுகாப்பு, போக்கு-வரத்து, அயல் நாட்டு உறவு ஆகிய மூன்று பொறுப்புக்களும் சமஷ்டி அரசிடம் விட்டுவைக்கப் பட வேண்டும் என்று நான் கூறும்போது உறுதியான ஒரு நிபந்தனை உண்டு. அந்த நிபந்தனை, சமஷ்டியில் சேரும் மாநிலங்கள் "சுதந்திர உறுப்புக்கள்" என்பது அரசியல் சட்டத்தில் ஒப்புக்கொள்ளப்பட வேண்டும் என்பதாம். அதுதான் மாநிலங்களின் சுதந்திரத்திற்கும் சுயமரியாதைக்கும் கிடைக்கும் பாதுகாப்பாகும்.

இதை ஒப்புக் கொள்வதன் எதிரொலியாக வேறு சில பிரச்சனைகளும் எழுகின்றன. அவை அரசியல் சட்டம், கொடி, நாட்டுப்பாடல், கலாச்சாரம் ஆகிய நான்கும் ஆகும்.

## தமிழகத்திற்குத் தனி அரசியல் அமைப்பு

இந்தியாவிலுள்ள மொழிவழி தேசிய இனம் ஒவ்வொன்றுக்கும் "சுய நிர்ணய" உரிமை வழங்கப்பட வேண்டும். 'சுய நிர்ணயம்' என்ற சொல்லை, 'தனது அரசியலைத் தானே தயாரித்துக் கொள்ளும் உரிமை' என்ற பொருளிலேயே நான் பயன்படுத்துகின்றேன். ஆம்; இந்தியாவிலுள்ள ஒவ்வொரு மாநிலமும், தனக்காக, தானே தயாரித்துக்கொண்ட தனி அரசியல் சட்டத்தைப் பெற்றிருக்க

வேண்டும். "இந்திய அரசியல் சட்டம்" என்பது, சமஷ்டி அரசிடம் விட்டுக்கொடுக்கப்பட்ட மூன்று பொறுப்புகளைப் பற்றியதாக மட்டுமே இருக்க வேண்டும். அமெரிக்க சமஷ்டி யிலும், சோவியத் குடியரசுகளின் கூட்டு அரசிலும், ஒவ்வொரு மாநிலமும் தனித்தனி அரசியல் சட்டத்தைப் பெற்றிருக்கின்றன. அதுபோல, இந்தியாவிலும் இருப்பதில் அபாய மொன்றும் ஏற்பட்டுவிடாது.

## முதலமைச்சர் 'பிரதமர்' ஆவார்!

இன்றைய காஷ்மீருக்குச் சுயநிர்ணய உரிமை வழங்கப் பட்டுள்ளது. காஷ்மீரின் அரசியல் தனியொரு அரசியல் சட்டத்தின் கீழ்தான் நடைபெறுகின்றது. அந்த அரசியல் சட்டத்தைக் காஷ்மீரியர்களே தயாரித்தார்கள்; இந்திய அரசியல் நிர்ணய மன்றத்தார் அல்லர். இந்தியப் பாராளுமன்றம் அதை ஏற்றுக்கொண்டது - அவ்வளவுதான்! காஷ்மீரியர்களுக்கு வழங்கப்பட்ட இந்த சுயநிர்ணய உரிமையை மற்ற மொழிவழி இனங்களுக்கும் வழங்கத் தயங்குவானேன்? காஷ்மீரைத் தவிர்த்த மற்ற மாநிலங்களில் அமைச்சர் குழுத் தலைவர் 'முதலமைச்சர்' என்ற பெயரால் அழைக்கப்படுகிறார். காஷ்மீரில் மட்டும் அமைச்சர் குழுத் தலைவர் "பிரதமர்" எனப் பெயர் பெற்றிருக்கிறார். ஆம்; பண்டித நேருவும் "பிரதமர்" தான்; குலாம் பக்ஷியும் பிரதமர்தான்! 'நேருவுக்கு நேர்' என்ற நிலைமையில் குலாம் பக்ஷி இருக்கின்றார். காரணம், காஷ்மீரியர்களுக்குத் தம் சொந்த நாட்டின் அரசியலைத் தயாரித்துக் கொள்ள சுயநிர்ணய உரிமை வழங்கப்பட்டதுதான். காஷ்மீர் குலாம் பக்ஷிக்கு வழங்கப் பட்ட "பிரதமர்" என்ற அந்தஸ்தை மற்ற மாநிலங்களின் அமைச்சர் குழுத் தலைவர்களுக்கும் வழங்குவதால் பாரதத் திற்கு ஒரு கேடும் நிகழ்ந்துவிடப் போவதில்லை.

## தமிழரசுக்குத் தனிக் கொடி

இந்தியா முழுவதற்கும் 'அறவாழி' பொறித்த மூவர்ணக் கொடியே தேசியக் கொடியாக விளங்குகின்றது. ஆம்; தமிழகத்திற்கும் அதுவே தேசியக் கொடி. வரலாற்று வழியே பார்த்தால், இந்தியா முழுவதற்கும் பயன்படுத்தப்பட்ட ஒரு கொடி முன் எப்போதுமே இருந்ததில்லை. மதவழிக் கொடிகள் இந்தியா முழுவதிலுமுள்ள அந்தந்த மதத்தினரால் பயன்படுத்தப்பட்டிருக்கலாம். ஆனால், அரசியல் அதிகாரத்தோடு கூடிய ஒரு கொடி குமரி முதல் இமயம் வரை பறக்க விடப்பட்டதில்லை.

தமிழ் மூவேந்தர்கள் தத்தம் கொடியை இமயமலையில் பொறித்ததாக இலக்கியங்கள் கூறுகின்றன. ஆனால் வில், புலி, மீன் சின்னங்களில் எந்த ஒரு சின்னத்தையும் வடக்கிலுள்ள மக்கள் அரசியல் ரீதியில் ஏற்றுக்கொண்டதாக வரலாற்றில் செய்தி இல்லை. அறவாழிச் சின்னத்தின் வரலாறும் அதுதான். மக்கள் மன வழிபட்ட ஐக்கிய இந்தியா இப்போதுதான் அமைந்துகொண்டு இருக்கின்றது. இந்திய வரலாற்றில் இது ஒரு புது முயற்சி. அதனால், கொடி விஷயத்தில் சமஷ்டி அரசு, மாநிலங்களின் சொந்த வரலாற்றுக்கு மதிப்பளிக்க வேண்டும்.

## சமஷ்டி நாடுகளைப் பார்!

'சமஷ்டி' என்பது, மொழிவழி இனங்களின் உரிமையையும், இந்திய நிலப்பரப்பின் ஒருமையையும் பிணைக்கும் நெறியாகும். கொடி விஷயத்திலும் இந்தக் கொள்கை கடைப்பிடிக்கப்பட வேண்டும். அதாவது, மாநில அரசு ஒவ்வொன்றும் 'ராஜ்யக் கொடி' என்ற பெயரில், தனிக்கொடி பெற்றிருக்க உரிமை உண்டு. இது ஒப்புக்கொள்ளப்பட்டால் வில்-புலி - மீன் சின்னங்கள் பொறித்த கொடி தமிழகத்தின்

அரசாங்கக் கொடியாக விளங்கும். சோவியத் ருஷ்யாவில் ஒவ்வொரு ராஜ்யமும் தனித் தனிக் கொடியைப் பெற்றிருக்கின்றன. ஆம், சோவியத் தேசியக் கொடியின் கீழே !

அமெரிக்க ஐக்கியக் குடியரசில், அமெரிக்கா முழுவதற்குமான தேசியக் கொடியில் ராஜ்யங்களின் எண்ணிக்கைக்கேற்ப நட்சத்திரங்கள் சேர்க்கப்பட்டுள்ளன. அதன் வாயிலாக ராஜ்யங்களின் தனித்தன்மை கௌரவிக்கப்படுகின்றது.

ஏன் ? — இன்றைய காஷ்மீர்கூடத் தனக்கென தனியாக ஒரு கொடியைப் படைத்துக்கொண்டிருக்கின்றது. இந்திய யூனியனின் உறுப்பு ராஜ்யமாக உள்ள காஷ்மீருக்கு வழங்கப்பட்ட இந்த உரிமையை மற்ற மாநிலங்களுக்கு வழங்க மறுக்கக் காரணமில்லை.

## ராஜ்ய கீதம் !

'ஜனகணமன' என்று துவங்கும் பாடல், இந்தியாவின் தேசிய கீதமாக ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்கிறது. அதனை மறுப்பதோ, எதிர்ப்பதோ அரசியல் சட்டப்படி குற்றமாகும். பாரதம் முழுவதற்குமாக ஒரு 'தேசிய கீதம்' வேண்டுமென்பதை, தமிழரசுக் கழகம் எதிர்க்கவில்லை. 'ஜனகண மன' பாடலை நம் கழகம் ஏற்றுக்கொண்டு விட்டது. ஆனால் ஒவ்வொரு மாநிலமும் 'ராஜ்ய கீதம்' என்ற பெயரில் தனித்தனிப் பாடலை அதிகார பூர்வமாகப் பெற்றிருக்க வேண்டும்—பெற உரிமை உண்டு என்பது நம் கொள்கை

## 'வாழிய செந்தமிழ்' வாழும்

" வாழிய செந்தமிழ், வாழ்க நற்றமிழர், வாழிய பாரத மணித் திருநாடு " என்பது பாரதியாரின் பாடல். பாடியவர்

தேசியப் போர்ராட்டத்தில் பங்கு கொண்ட புரட்சிக் கவிஞர். பாட்டின் பொருள், 'தமிழ் வாழ்க-தமிழர் வாழ்க-பாரத நாடு வாழ்க' என்பதாகும். தமிழகத்தின் ராஜ்ய கீதமாக ஏற்பதற்குத் தகுதி வாய்ந்த இந்தப் பாடலை அரசியல் ரீதியில் அங்கீகரிக்க மறுக்கிறது ஆட்சி. 'ஜனகணமன' என்ற பாடலுக்குப்பிறகூட இதைப் பாடக்கூடாதாம். அரசாங்க நிகழ்ச்சிகளின் துவக்கத்தில் பிரார்த்தனைப் பாடலாகக்கூட இதனைப் பாடுவது முறையல்லவாம்!

அமெரிக்க சமஷ்டியில் ஒவ்வொரு ராஜ்யத்திற்கும் 'ராஜ்ய கீதம்' என்ற பெயரில் ஒவ்வொரு 'பாடல்' உண்டு. சமஷ்டி முழுவதற்குமாக, 'தேசிய கீதம்' என்ற பெயரில் ஒரு பொதுப் பாடல் உண்டு. ராஜ்யங்களில் இந்த இரண்டு விதமான பாடல்களும் முன்னும் பின்னுமாகப் பாடப்படுகின்றன. அங்கு 'ராஜ்ய கீதம்' என்பது அரசியல் சட்டத்தால் அங்கீகரிக்கப் பட்டதாகும்.

காஷ்மீர் மாநிலமும், தனக்கென 'ராஜ்ய கீதம்' ஒன்றைச் சிருஷ்டித்துக் கொண்டிருக்கிறது. அதை மத்திய அரசும் ஏற்றுக் கொண்டு விட்டது. இந்த உரிமை எல்லா மாநிலங்களுக்கும் வழங்கப்பட வேண்டுமென்பதே நம் கொள்கை.

### கலாச்சார சுதந்திரம்

மொழிவழி தேசிய இனங்களின் அரசியல் - பொருளாதார நலன்களைப்போலவே, கலாச்சார நலன்களும் காக்கப்பட வேண்டும். ஒருவகையில், கலாச்சாரத்திற்கே நான் அதிக முக்கியத்துவம் அளிக்க விரும்புகிறேன். தேசிய இனங்களின் தனித்தன்மையை ஆயிரம், ஆயிரம் ஆண்டு

களாக உலகுக்கு உணர்த்தி வரும் பிரதான சக்தி கலாச்சாரம்தான். இந்தியாவில் பாரத கலாச்சாரம் என ஒன்று தனியாக இல்லை. மொழிவழியே வெவ்வேறு இனங்கள் போற்றிக் காத்து வரும் பல்வேறு கலாச்சாரங்களையே "பாரத கலாச்சாரம்" எனக்கூறி வருகின்றோம். மத வழிப் பழக்க வழக்கங்களிலிருந்து பெருமளவுக்குத் தனித்து இயங்கும் தன்மையுடையது மொழிவழிக் கலாச்சாரம். மத்திய அரசு சமயச் சார்பற்றதாகையால், சமய வழிப்பட்ட கலாச்சாரங்களை அது கணக்கில் எடுத்துக் கொள்வதற்கில்லை.

## பன்மையில் ஒருமை

ஒரு இனத்தவரின் கலாச்சாரத்திற்கும், இன்னொரு இனத்தவரின் கலாச்சாரத்திற்கும், சிலபல அம்சங்களில் கலப்பு ஏற்பட்டிருக்கலாம். ஆனால், எல்லா அம்சங்களிலுமே 'ஒருமை' ஏற்பட்டுவிட்டதாக யாரும் சாதிப்பதற்கில்லை. கலாச்சாரத் துறையில் இந்தியர்களின் எதிர்கால லட்சியம் "பன்மையில் ஒருமை" காண்பதாகத்தான் இருக்க முடியும். அதுகூட இன்று இருப்பதாகச் சொல்வதற்கில்லை. எவ்வளவு விசால நோக்குடன் பார்த்தாலும் கலாச்சாரத் துறையில் பன்மையை அழித்து "ஒருமை"யைத் தோற்றுவிக்க முடியுமென்று சொல்வதற்கில்லை.

ஆகவே, மொழிவழி இனங்கள் தத்தம் கலாச்சாரத்தைக் காத்துக்கொள்ள உரிமை பெற்றிருக்க வேண்டும். குறிப்பாக, தமிழகம் அயல் நாடுகளோடு கலாசார உறவு கொள்ள உரிமை பெற்றிருக்க வேண்டும். அதாவது, கலை-கலாச்சாரத் தூதுக் குழுக்களைத் தமிழகத்திலிருந்து அயல் நாடுகளுக்கு அனுப்பத் தடை எதுவும் இருக்கக் கூடாது.

இந்த உரிமை எல்லா மாநிலங்களுக்கும் வழங்கப்பட வேண்டும்.

## கடல் கடந்த தமிழர் பிரச்சனை

‘அயல் நாட்டு உறவு’ பற்றிய பொறுப்பு, சமஷ்டி அரசிடம் விடப்படும் என்றாலும், அதற்கொரு நிபந்தனையுண்டு. அயல் நாடுகளிலுள்ள தமிழ் மொழி பேசும் மக்களின் நலன்களைக் காக்க, தமிழகத்திற்கு விசேஷ வாய்ப்பும் வசதியும் இருக்க வேண்டும்.

“இந்தியர்” என்ற பெயரில் அயல் நாடுகளில் வாழும் மக்களில் மிகப் பெரும்பாலோர் தமிழர்களே யாவர். குறிப்பாக மலேயா, இலங்கை, பர்மா, இந்தோனேஷியா முதலிய நாடுகளிலுள்ள இந்திய வர்த்தகர்களும், தொழிலாளர்களும் அனேகமாகத் தமிழர்களே. அவர்கள் அங்கு அடைந்து வரும் அல்லல்கள் சொல்லும் தரமல்ல. அந்த அல்லல்கள் ஆண்டு தோறும் கூடி வருகின்றனவேயன்றி, குறைந்தபாடில்லை.

அயல் நாடுகளில் குடியேறி வாழும் தமிழர்கள் விஷயத்தில் மத்திய அரசு திருப்திகரமாகச் செயல் படவில்லை என்பது உலகறிந்த உண்மை. ‘கண்ணுக்குப் புருவம் தூரம்’ என்ற பழமொழிபோல, சென்னைக்கு டில்லி தூரத்தில் இருப்பதால், இங்குள்ள மக்களின் உணர்ச்சியை எதிரொலி செய்ய டில்லியால் முடியாமலிருக்கலாம். ஆகவே, தமிழர்களின் உள்ளங்களை மட்டுமே உறுத்தக் கூடிய அயல் நாட்டுத் தமிழர் விஷயத்தில், தமிழ் மாநிலம் விசேஷ உரிமை பெற்றிருக்க வேண்டும். சிறப்பாக, தமிழர்கள் குடியேறி வாழும் நாடுகளுக்கு அனுப்பப்படும் இந்தியத் தூதர்கள் தமிழ் நாட்டவராகவே—தமிழக அரசு சிபாரிசு செய்பவராகவே இருக்க வேண்டும்.

சோவியத் ருஷ்யா, பல்வேறு மாநிலங்களைக் கொண்ட ஒரே நாடாக விளங்குகிறது. ஆனால், அந்நாட்டிலுள்ள உக்ரேன், பைலோ ரஷ்யா என்ற இரண்டு மாநிலங்கள் மட்டும் ஐ. நா. மன்றத்தில் தனித்தனியே பிரதிநிதித்துவம் பெற்றிருக்கின்றன. அதனால் உலக அரசியல் அரங்கில் சோவியத் ருஷ்யாவின் தேசியத் தன்மை பழுதுபட்டு விட்டதாகச் சான்று இல்லை.

## முக்கால் கோடித் தமிழர் வெளியே !

தமிழ்ப் பேசும் மக்கள் சுமார் மூன்று கோடியாவர். அவர்களில் முக்கால் கோடிப் பேர் தமிழகத்திற்கு வெளியே அயல் நாடுகளில் வாழ்கின்றனர். இந்த நிலைமை இந்தியாவிலுள்ள வேறு எந்தத் தேசிய இனத்தவருக்கும் இல்லை. அதனாற்றான், " அயல் நாட்டுத் தமிழர் " விஷயத்தில், அவர்களின் தாயகமான தமிழகத்திற்குப் பிற மாநிலங்களுக்கு இல்லாத " விசேஷ உரிமை " அரசியல் சட்டப்படி இருக்க வேண்டுமென்று நாம் கோருகின்றோம்.

# அதிருப்தி வளருகிறது!

தமிழரசுக் கழகம் மாநில சுயாட்சிக் கிளர்ச்சியைத் தீவிரப்படுத்திய பிறகு, அரசியல் கட்சி வட்டாரங்கள் விழிப் படைந்திருக்கின்றன. தனிப்பட்ட அரசியல் பிரமுகர்கள் கூட இந்த மாறுதலுக்கேற்பத் தங்கள் மனப்போக்கை உரு வகப்படுத்திக் கொண்டு வருகின்றனர். ஆம்; மத்தியில் அதி காரங்களைக் குவித்துள்ள தற்போதைய அரசியல் அமைப் புச் சட்டத்தின் மீது அதிருப்தி வளர்ந்து வருகின்றது.

## கீழிருந்து மேல்...

திரு. வி. பி. மேனன் என்பவர், சர்தார் படேல் மத்திய அரசின் அமைச்சராக இருந்து சமஸ்தான இலாகாவை நிர் வகித்த காலத்தில் அவருக்குச் செயலாளராக இருந்தார். நிர் வாகத் துறையிலும், அரசியல் துறையிலும் நல்ல ஞானம் பெற்றவர். அவர் கூறுவதைக் கேளுங்கள்:

> "நிதித் துறையில்கூட மாநில நிர்வாகத்தில் எந்த ஒரு இலாகாவாயினும் மத்திய சர்க்காரின் மான்யம் பெறுமல் இருக்கிறதா என்று எண்ணிப் பார்க்கக் கூட இயலவில்லை. இதன் விளைவு என்னவெனில், மாநிலங்கள் மத்திய சர்க்காரின் உதவியை நம்பியே

காரிய மாற்ற வேண்டிய நிலை பிறந்துவிட்டது; இதனால் சுய நம்பிக்கையும் சுதந்திரமும் இழந்து நிற்கின்றன மாநிலங்கள்.

"ஒரு அரசியல் அமைப்பு நிரந்தரமாகவும், இடையூறுகளைத் தாங்கிக் கொள்ளக் கூடியதாகவும் இருக்க வேண்டுமானால், அது கீழிருந்து மேல் நோக்கிக் கட்டப்பட்டதாக இருக்க வேண்டுமே யன்றி, அது மேலிருந்து கீழ் நோக்கி அமைந்ததாக இருக்கக் கூடாது."

மத்திய அரசில் பெரிய பதவி வகித்து அனுபவத்தின் மூலம் தற்போதைய அரசியல் சட்டத்தில் உள்ள குற்றங் குறைகளை மிகத் தெளிவாக உணர்ந்திருக்கிறார் திரு வி. பி. மேனன். "அரசியல் அமைப்பு கீழிருந்துமேல் நோக்கிக் கட்டப்பட்டதாக இருக்க வேண்டுமேயன்றி, மேலிருந்து கீழ் நோக்கிக் கட்டப்பட்டதாக இருக்கக் கூடாது" என்று அவர் கூறியுள்ளது கவனத்தில் கொள்ளத் தக்கதாகும்.

இப்போதைய அரசியல் அமைப்பு மேலிருந்து கீழ்நோக்கிக் கட்டப்பட்டதாகும். அதனாலேயே மத்தியில் அதிகாரங்கள் குவிந்து கிடக்கின்றன. இதற்கு மாறாக, ராஜ்யங்களின் அதிகாரங்கள் கூடுதலாகவும் மத்திய அரசின் அதிகாரங்கள் குறைவாகவும் இருக்க வேண்டுமென்று தமிழரசுக் கழகம் கூறுகின்றது.

## நீண்ட காலக் கிளர்ச்சி

திரு. ஏ. ராமசுவாமி முதலியார் அவர்கள், 4-11-59ல் காஞ்சிபுரம் நகரசபையார் தமக்கு வரவேற்பளித்தபோது,

> "வடநாடு—தென்னுடு என்று சிலர் சொல்வதில் எனக்கு நம்பிக்கையில்லை. உண்மையான மாநில சுயாட்சி நடைபெற வேண்டும். மாநிலங்களுக்குப் பூரண சுயாட்சி வழங்கப்பட வேண்டும். இதையே நீண்ட காலமாகச் சில தலைவர்கள் வற்புறுத்தி வருகிறுர்கள்"

என்று பேசியிருக்கிறுர். 'இதையே நீண்ட காலமாகச் சில தலைவர்கள் வற்புறுத்திவருகிறுர்கள்' என்று அவர் குறிப்பிடுவது, தமிழரசுக் கழகம் நடத்திவரும் கிளர்ச்சியையே யாகும்.

## தலைகீழ் மாற்றம் வேண்டும்

இந்திய மக்களின் அன்புக்குரிய தலைவர்களில் ஒருவரான திரு. ஜெயப்பிரகாஷ் நாராயணர்கூடத் தற்பொழுதைய அரசியல் அமைப்புச் சட்டத்தை வெறுத்துப் பேசியிருக்கிறுர் :

> "ஏற்கெனவே அதிக வேலைப் பளுவுள்ள மத்திய அரசிடமிருந்து தபால்—தந்தி, பாங்குகள் போன்றவற்றை எடுத்துவிட்டு அவற்றைத் தனிக் கார்ப்பரேஷனிடத்தில் கொடுத்து விடலாம். இப்பொழுது எல்லா அதிகாரங்களும் மத்திய அரசிடம் குவிந்திருக்கின்றன. இது தலைகீழாக மாறவேண்டும். தற்காப்பு, நாணயச் செலவாணி, மற்றும் ஒன்றிரண்டு அதிகாரங்களை மட்டும் மத்திய அரசிடம் கொடுக்கலாம்"

என்பது திரு. ஜெயப்பிரகாஷ் கருத்தாகும்.

## தாமதத்தால் அபாயம்!

காந்தியடிகளின் அத்தியந்த சிஷ்யையான திருமதி. மீராபென் அம்மையாரை அரசியல் உலகம் நன்கு அறியும்.

அவரும் ஏகாதிபத்தியப் பாணியில் அமைந்துள்ள தற்போதைய அரசியல் சட்டத்தை வெறுத்துக் 'கல்கி' 2-3-58 இதழில் எழுதியிருக்கிறார் :—

"ஒற்றுமை மக்களுக்கு இன்பம் தந்து நீடித்து நிலைத்து இருக்கவேண்டுமானால், இந்த விஷயத்தை பூவைத் தொடுவதுபோலக் கூசிப் பரிமாறவேண்டும். மொத்த இணைப்புக்குள் அடங்கும் பகுதிகள் ஒவ்வொன்றுக்கும் எவ்வளவு முடியுமோ அவ்வளவு சுதந்திரம் தரவேண்டும். இணைப்பு விஷயத்தில், இணையும் பகுதிகளுக்கு மனமுவந்த சம்மதமும் மத்திய ஆட்சியுடன் கூட்டுறவுக்கு மனமார்ந்த ஒப்புதலும் இல்லாவிடில் மனத்தில் குடைந்து கொண்டிருக்கும் குறைகளும் ஏமாற்றங்களும் மனக் கசப்பும் வளர்ந்து நிலைமை மோசமாகும். மக்களின் அன்பைப் பெறுவதற்கு வழி, அதிகாரங்களைக் கேந்திரத்தில் வைத்துக் கொள்வதல்ல. மையத்து அதிகாரங்களை மாநிலங்களுக்குப் பகிர்ந்து கொடுப்பதுதான் முறை. ஆனால், இவற்றிற்கு நேர்மாறான முறைகள்தாம் நாட்டில் கையாளப்பட்டு வருகின்றன என்பது வருந்தத் தக்கது."

## நிர்ப்பந்த நிலைமை

திரு. உமாயூன் கபீர் என்பவர், தற்பொழுது மத்திய அரசாங்கத்தில் கலாச்சார இலாகாவை நிர்வகிக்கும் துணையமைச்சர் ஆவார். அவர் கூறுகிறார் :

"கடந்த 40 ஆண்டுகளாக இந்தியாவில் இந்தியச் சூழ்நிலைக்கேற்ற ஒரு சமஷ்டி முறையை உருவாக்கிக் கொள்ளும் போக்குக்குத்தான் நாம் நிர்ப்பந்திக்கப்பட்டு வந்திருக்கிறோம்.

> "சமஷ்டி அங்கங்கள் அவற்றிற்குரிய துறைகளில் 'சுயாட்சி' அதிகாரம் உள்ளவையாக இருந்து, நன்கு வரையறுக்கப்பட்ட ஒரு சில பொறுப்புக்களில் மாத்திரம் மத்திய அரசிடம் விசுவாசம் காட்டவேண்டும்"

என்று அலகாபாத் ஆராய்ச்சி நிலையத்தில் பேசியதாக 'தினமணி' 2-7-58 இதழில் பிரசுரிக்கப்பட்டிருக்கிறது.

## "அவருக்கும்" அதிருப்தி !

இந்தியாவின் பிரதமர் நேரு அவர்கள்கூட மொழிவழி இனங்களின் தாயகங்களை அடிமைப்படுத்தி வைத்திருக்கும் தற்பொழுதைய அரசியல் அமைப்பில் திருப்தியடைய வில்லை. லஞ்சம், ஊதாரித்தனமான செலவு, மந்தமான நிர்வாகம் ஆகிய ஊழல்களுக் கெல்லாம் அதிகாரங்கள் ஒரே இடத்தில் குவிக்கப்பட்டிருப்பதுதான் காரணம் என்பதைப் பிரதமர் நேருவும் ஒப்புக்கொள்கிறார்.

"அரசாங்க நிர்வாகத் துறைகளில் கால தாமதமும் லஞ்சமும் தாண்டவமாடுவதற்குக் காரணம், அதிகாரங்களை ஒரே இடத்தில் குவித்து வைத்திருப்பதாகும்."

"அதிகாரங்கள் இவ்வாறு குவிந்து கிடப்பதால் எந்த ஒரு பிரச்சனையிலும் முடிவு எடுக்கவேண்டுமானால், அது பற்றிய கடிதங்கள் கடந்து செல்லவேண்டிய கட்டங்களும் தூரமும் அளவிட முடியாதனவாக இருக்கின்றன. ஒவ்வொரு கட்டத்தைத் தாண்டும்போதும் அதற்குரிய காணிக்கை அளிக்கப்பட்டாலன்றி அந்தக் கடிதங்கள் நகருவதேயில்லை. ஆகவே, ஊழல்களுக்கு முக்கிய காரணம், அதிகாரங்கள் ஒரே இடத்தில் குவிக்கப்பட்டிருப்பதே யாகும்."

## கிளர்ச்சி வலுப்பெற வேண்டும்

நிலைமையை இவ்வளவு தெளிவாக உணர்ந்துள்ள பிரதமர், தற்பொழுதைய அரசியல் அமைப்புச் சட்டத்தை மாற்றவும் மாநிலங்களுக்குச் சுதந்திரம் வழங்கவும் முயலாத தற்குக் காரணம் யாது?

சுயாட்சிக் கிளர்ச்சி போதிய அளவு வலுப்பெருதது தான். எந்த ஒரு மாறுதலையும் அரசாங்கமோ, ஆளுங் கட்சியோ வலுவில் தானே முன்வந்து செய்துவிடுவதில்லை. அப்படிச் செய்வதற்கு ஆதிக்கச் சக்திகள் எளிதில் அனும திப்பதும் இல்லை.

ஆகவே, மாநில அரசுகளோ, மத்திய அரசோ அல்லது ஆளுங் கட்சியான காங்கிரசோ, அரசியல் சட்டத்தைத் திருத்தத் தாமாக முயலப்போவது இல்லை. இந்த உண்மையை உணர்ந்துதான் மாநிலங்களுக்குச் சுயாட்சி வேண்டுமென்ற கோரிக்கைக்குப் பொது மக்களுடைய ஆதரவைத் திரட்டப் பாடுபட்டு வருகிறது தமிழரசுக் கழகம்.

## தெளிவு வேண்டும்

இங்கு ஒரு விஷயத்தைத் தமிழரசு இயக்கத் தோழர் களும் பொது மக்களும் தெளிவாகத் தெரிந்துகொள்ள வேண்டும். பிரதமர் நேரு, திருவாளர்கள் வி. பி. மேனன், சர். ஏ. ராமசுவாமி முதலியார் போன்றவர்கள், மத்தியில் உள்ள அதிகாரங்களில் சிலவற்றை ராஜ்யங்களுக்கு வழங் குவதை மட்டுமே 'மாநில சுயாட்சி' என்கின்றனர். தமிழரசுக் கழகத்தின் கண்ணோட்டத்தில், அதிகாரங்களைப் பரவலாக்கும் முயற்சி மாநில சுயாட்சிக்கான ஆரம்ப நடவடிக்கையே ஆகும். தனித்த அரசியல் சட்டம்கொண்ட சுதந்திர அரசுகளின் கூட்டுக் குடியரசே நமது லட்சியம்.

## தி. மு. க.வும் வரவேற்கிறது

தமிழகத்தை அல்லது திராவிடத்தைத் துண்டாடக் கோரும் தலைவர்கள்கூட மாநிலங்களுக்குச் சுயாட்சி வழங்குவதை வரவேற்கின்றனர்.

> "உறவுக்கு டில்லி, உரிமை யெல்லாம் எனக்கே' என்று ஒவ்வொரு பகுதியும் வாழ்ந்தால், அவரவர் சொத்தையும் சுகத்தையும் கொண்டு உரிமையோடு வாழலா மல்லவா? அந்த உரிமையைத்தானே 'தனி நாடு' என்ற பெயரில் கேட்கிறோம் நாம்!"

என்று 'திராவிட நாடு' 22-11-58 இதழின் தலையங்கத்தில் குறிப்பிடுகின்றார் திரு. சி. என். அண்ணாத்துரை.

1956-ஆம் ஆண்டின் இறுதியில் வெளியிடப்பட்ட தி. மு. கழகத்தின் தேர்தல் பிரகடனத்தில், திராவிட நாட்டுப் பிரிவினைபற்றிய பேச்சே இல்லை. "மத்தியில் குவிந்துள்ள அதிகாரங்களை மாநிலங்களுக்குப் பகிர்ந்தளிக்க வேண்டும்" என்று மட்டுமே குறிப்பிடப்பட்டிருக்கிறது.

## பெரியார் மனமாற்றம்

தி. க. தலைவர் ஈ. வே. ரா., 26-1-56ல் எனக்கு எழுதிய கடிதமொன்றில்,

> "......'யூனியன் ஆட்சி' என்பது படை, போக்குவரத்து, வெளிநாட்டு உறவு ஆகியவற்றைக் கொண்டதாகவும், மற்றைய அதிகார ஆட்சி உரிமைகள் மாநிலங்களுக்குரியவையாகவும் இருக்கவேண்டும்"

என்று குறிப்பிட்டிருக்கிறார். இந்தக் கடிதம் எனது அனுமதியைப் பெற்று தி. க. வின் தினசரியான 'விடுதலை'யில் அப்போதே வெளியாகி இருக்கிறது.

இந்தச் சான்றுகளை யெல்லாம் நான் கூறுவதற்குக் காரணம், இதுவரை 'ஏக இந்தியா' கூறிவந்தோரும் சரி, தமிழகத்தை அல்லது திராவிடத்தைத் துண்டாடுவதற்குத் "தொண்டு" செய்து வந்தோரும் சரி; தங்கள் லட்சியத்தில் பிடிப்பற்றுத் தமிழரசுக் கழகம் கூறும் 'மாநிலங்களுக்குச் சுயாட்சி, மத்தியிலே சமஷ்டி' என்ற கொள்கையிலே பற்றுக்கொண்டு வருகின்றனர் என்பதை உறுதிப் படுத்தவே யாகும்.

# வேண்டுகோள் !

உறையூர்ப்பதி வாழ் தமிழ்ப் பெருமக்களே ! உங்களிடம் என் இதயத்தைத் திறந்து பேசியிருக்கிறேன். இன்பத் தமிழகமே என்னை ஈன்றெடுத்த தாயகம்! அதுவே, நான் ஓடியாடும் பூங்கா! அந்தத் தமிழகத்தின் விடுதலைக்காகப் பாடுபடுவதே என் வாழ்க்கை லட்சியம். என் வாழ்நாளில் எஞ்சியுள்ள காலத்தைத் தமிழக உரிமைக் கிளர்ச்சிக்காகவே அர்ப்பணித்துள்ளேன்.

## தமிழர் வாழ்வில் சுதந்திரம் மணக்க வேண்டும்

தமிழ்ப் பெருமக்களே! என்னைப் பின்பற்றுவோரில் பெரும் பணக்காரர் யாருமில்லை. அத்தனை பேரும் உழைப்பாளிகள். இந்த எளிய கூட்டத்தை வைத்துக் கொண்டு இன்பத் தமிழகத்தின் உரிமை காக்கப் போராடும் பொறுப்பை நான் ஏற்றுக் கொண்டிருக்கிறேன். மூன்று கோடித் தமிழர்களின் ஆதரவிருப்பின் என் வாழ் நாளிலேயே தமிழகம் சுயாட்சி பெறுவது திண்ணம். தமிழகத்தை, யார் அல்லது எந்தக் கட்சியினர் ஆளுகின்றனர் என்பதன்று நம் முன்புள்ள பிரச்சனை. தனி மாநிலமாகி விட்ட நம் தாயகத்தை ஆளுவோர் தமிழராகத்தான் இருப்பார்கள் அதில் எனக்கு ஐயமில்லை. ஆனால்,

தமிழகத்தின் வாழ்வில் சுதந்திரம் மணக்க வேண்டும். அந்த நிலை தோன்றுதவரை, தமிழரிலே யார்—எந்தக் கட்சியார் ஆண்டாலும் என்ன பயன்?

**கற்றுத் தந்தது காங்கிரசே!**

நான் கொண்டுள்ள "மாநிலங்களுக்குச் சுயாட்சி-மத்தியில் சமஷ்டி" என்ற லட்சியம், காங்கிரசிடமிருந்து கற்றது தான். வெள்ளையர் வெளியேறிவிட்ட இந்தியாவில், "சம அந்தஸ்துடைய சுதந்திர அரசுகளைக் கொண்ட சமஷ்டி அமையும்" என்று திரிபுரா காங்கிரஸ் தலைமை உரையில் சுபாஷ் பாபு கூறினர்.

அது மட்டுமா? 1944-ம் ஆண்டில் பம்பாய் நகரில் கூடிய காங்கிரஸ் காரியக் கமிட்டி, "மாநிலங்கள் விரும்பினல் மத்திய சமஷ்டியிலிருந்து பிரிந்து போகவும் அனுமதிக்கப்படும்" என்று தீர்மானித்தது. அதன்படியே பாகிஸ்தான் பிரிவினை ஏற்கப்பட்டதாகவும் பிரதமர் நேரு ஒரு முறை பார்லிமெண்டில் பேசினர்.

**பிரிட்டிஷ் மந்திரி சபைத் திட்டம்**

1946-ல் பிரிட்டிஷ் மந்திரி சபைத் தூதுக் குழுவினர் கொண்டு வந்த திட்டத்தைக் காங்கிரஸ் காரியக் குழு மனமுவந்து ஏற்றுக்கொண்டது. அந்தத் திட்டத்தில்,

> "அயல் நாட்டு ராஜீய உறவு—பாதுகாப்பு—போக்கு வரத்து ஆகிய மூன்றும் மத்திய அரசுக்குரியவை; 'மிச்ச அதிகாரங்கள்' உள்ளிட்ட இதர எல்லா அதிகாரங்களும் மாநிலங்களுக்கு உரியவை"

என்று வரையறுக்கப்பட்டிருந்தது. அது மட்டுமல்லாமல், ஒவ்வொரு மாநிலமும் தனது அரசியலைத் தானே தயாரித்துக்கொள்ளும் "சுய நிர்ணய உரிமை"யும் அந்தத் திட்டத்தில் வழங்கப்பட்டிருந்தது.

இதற்கெல்லாம் மேலாக, "மத்திய அரசின் மூன்று பொறுப்புக்கள்கூட, மாநில அரசுகள் தாமே விரும்பிக் கொடுத்தவையாக இருக்க வேண்டும்" என்பதும் திட்டத்தில் தெளிவாக்கப்பட்டிருந்தது. மற்றும் "சுதந்திர இந்தியாவின் அரசியல் சட்டம், அது அமுலுக்கு வந்த பத்தாண்டுகளுக்குப் பிறகு பொது மக்களின் அபிப்பிராயத்திற்கு வைக்கப்பட வேண்டும்" என்றும் பிரிட்டிஷ் மந்திரி சபைத்திட்டம் கூறியது. மாநிலங்களுக்கு இவ்வளவு தாராளமாகச் சுதந்திரம் வழங்கிய மந்திரி சபைத் தூதுக் குழுத் திட்டத்தை அன்றையக் காங்கிரஸ் முணுமுணுத்தலின்றி முழுமனதோடு ஏற்றுக்கொண்டது.

பின்னர், பிரிட்டிஷார் தாமாகவே அந்தத் திட்டத்தைக் கைவிட்டு, நாட்டைத் துண்டாடினர்.

### காங்கிரஸ் தோழர்களுக்கு...

இன்று நான் கேட்பதெல்லாம், அந்தத் திட்டத்தை அமுல்நடத்த வேண்டுமென்பதுதான். காங்கிரஸ் தோழர்களுக்கு இந்தச் சமயத்தில் ஒரு வேண்டுகோள் விடவேண்டியது என் கடமையாகிறது.

காங்கிரஸ் தோழர்களே! ஆளுங் கட்சியாரான உங்கள் எதிரே, இரண்டு கிளர்ச்சிகள் இருக்கின்றன.

ஒன்று, "மாநிலங்களுக்குச் சுயாட்சி-மத்தியில் சமஷ்டி" என்பது. அது, தமிழரசுக் கழகம் நடத்தும் கிளர்ச்சி. இந்தியாவின் ஐக்கியத்திற்கு ஒத்த வகையில் தமிழரிடையே ஏற்பட்டுள்ள உரிமைக் கிளர்ச்சியாக இதை மதியுங்கள்.

இன்னொன்று, 'ஆரியர் - திராவிடர்' என்ற நிற வேற்றுமை அடிப்படையில், இந்தியாவிலிருந்து தென்னகத்தைத் துண்டாட வேண்டும் என்பது. இந்த இரண்டு கிளர்ச்சிகளில் ஏதேனும் ஒன்றிடம் பணிந்து தீரவேண்டிய நிலையில் காங்கிரஸ் கட்சி பலவீனப் பட்டுவிட்டதென்பதை நீங்கள் மறந்துவிடக் கூடாது.

நான் கேட்கிற மாநில சுயாட்சியை மறுப்பது காங்கிரஸ்காரர்களாகிய உங்களுக்குச் சுலபம்தான். ஆனால், இருக்கின்ற நிலைமையிலேயே நாட்டை நடத்திச் செல்வது இனி உங்களால் சாத்தியப்படாது. ஆகவே, மாநில சுயாட்சியை நீங்கள் மறுக்கின்றபோது, உங்களை அறியாமலேயே பிரிவினைக் கிளர்ச்சியை வலுப்படுத்துகின்றீர்கள் என்பது நினைவிருக்கட்டும். தமிழரசுக் கழகத்தைத் தோற்கடிப்பீர்களானால், பிரிவினைக் கிளர்ச்சி வெற்றி முகத்தோடு முன்னேறுவது திண்ணம். ராணுவ பலம் கொண்டு பிரிவினைக் கிளர்ச்சியை ஒடுக்க நீங்கள் முயலலாம். ஆனால், அந்த நிலையில் உங்களிடம் அனுதாபம் காட்டுவோர் தமிழகத்தில் இருக்க மாட்டார்கள்.

## எனது செல்வங்களுக்கு...

தமிழரசுக் கழகத் தோழர்களுக்காக - எனது செல்வங்களுக்காகத் தனியே சில வார்த்தைகள் :

தோழர்களே! தமிழரசுக் கழகம் தோன்றி வளர்ந்த பன்னிரண்டு ஆண்டுகளில் பல கிளர்ச்சிகளை நடத்தினோம். ஒன்றன் பின் ஒன்றாகப் பலவெற்றிகளையும் கண்டோம். இறுதி வெற்றிக்கான பணியில் இப்போது ஈடுபட்டிருக்கிறோம். மாநில சுயாட்சி வெறும் பிரச்சாரத்தினாலேயே கிடைக்குமானால் எனக்கு மகிழ்ச்சிதான். ஆனால், அது சாத்தியமாகுமென்று நான் கருதவில்லை. ஆகவே, தமிழகத்தின் உரிமைக்

காகக் கடுமையானதோர் போராட்டத்தில் ஈடுபட நாம் கடமைப்பட்டுள்ளோம்.

ஆனல், முதலில், 'மாநில சுயாட்சி' என்ருல் என்ன ? மத்திய சமஷ்டி அவசியப்படுவது ஏன் ? சுயாட்சியாலும், சமஷ்டியாலும் தமிழகமும் இந்தியாவும் அடைய விருக்கும் பலன்கள் யாவை ? இதற்கு மாருக, பிரிவினையால் விளையக் கூடிய கேடுகள் என்ன ? இந்த வினக்களை யெல்லாம் நாமே எழுப்பி, அவற்றிற்கு விடையளித்து மக்களிடையே நாம் பிரச்சாரம் செய்ய வேண்டும். பட்டி தொட்டிகளி லெல்லாம் நம்முடைய கிளர்ச்சி எதிரொலி செய்ய வேண்டும்.

## பழைய நினைவுகள்

பன்னிரண்டு ஆண்டுகளுக்கு முன்பு, நான் குமரி முனையில் நின்று கொண்டு தெற்கெல்லைக் கிளர்ச்சியைத் துவக்கி வைத்தபோதும் சரி, பின்னர் திருப்பதியில் நின்று கொண்டு 'வேங்கடத்தை விடமாட்டோம்' என்று நான் கோஷித்த போதும் சரி; சென்னையிலே சிலர் சிரித்தார்கள். அப்போது என் உடல் நிறை 129 லிருந்து 88 ஆகக் குறைந் திருந்தது. பார்க்கப் பரிதாபமான தோற்றம். மரணத்தின் நிழலில் 'வாழ்ந்த' காலம் என்றும் சொல்லலாம். ஒரு சாதாரணக் காங்கிரஸ் தொண்டன் என்பதற்கு அதிகமான அரசியல் அந்தஸ்து எதுவும் அப்போது என் பெயரோடு ஒட்டிக்கொண்டிருக்கவில்லை. ஆனல், தன்னலமற்று நாம் நடத்திய எல்லைக் கிளர்ச்சி, சிரித்தவர்களையும் பிற்காலத்தில் சிந்திக்க வைத்தது. அதன் முடிவு அகில இந்தியாவும் அறிந்ததாகும்.

## வெற்றி நிச்சயம் !

இன்றும் உறையூர்ப் பதியில் நின்றுகொண்டு "மாநில சுயாட்சிக் கிளர்ச்சி" யைத் துவக்கி வைக்கிறேன். இதைக்

கண்டு, இப்போது மாற்று முகாமிலே சிலர் சிரிக்கக்கூடும். "இந்தச் சிவஞானமாவது, மாநிலங்களுக்குச் சுயாட்சி தேடி விடுவதாவது? அது, அகில இந்தியப் பிரச்சனை ; சிவஞானத் தால் ஆகக்கூடியது அன்று" என்று நினைப்போர் இருக்கக் கூடும்.

தோழர்களே! இந்த ஒரு வாசகத்தைக் குறித்து வைத் துக்கொள்ளுங்கள் :

> இன்று நான் துவக்கி வைக்கும் சுயாட்சிக் கிளர்ச் சிதான் வெகு விரைவில் வெற்றி பெறப் போகின் றது. பிரிவினைக் கிளர்ச்சி இருந்த இடம் தெரியா மல் மறைந்துவிடப் போகிறது. இன்று பிரிவினைக் கிளர்ச்சியை நடத்துவோரும் நாளை நம்மோடு சேர்ந்து கொள்ளப்போவது திண்ணம். மீண்டும் சொல்கிறேன் : விரைவில் வெற்றி பெறக் கூடிய தான உரிமைக் கிளர்ச்சியை இன்று துவக்கி வைக் கின்றேன்.

தமிழ் நிலத்திற்கு வேண்டியது அரசியல் சுதந்திரம், தமிழ் இனத்திற்கு வேண்டியது, தனது தாயகத்தின் அரசியலைத் தானே தயாரித்துக் கொள்ளும் சுயநிர்ணயம்.

பாரதத்திற்கு வேண்டியது, சுதந்திர மாநிலங்கள் தாமே விரும்பிக் கலந்த சமஷ்டி.

ஆம்; சுதந்திரம்-சுயநிர்ணயம்-சமஷ்டி ஆகிய மூன்றும் தமிழரசுக் கழகத்தாரின் உயிர் நாடிக் கொள்கைகள். இதனை மறவாதீர்!

வாழ்க தமிழகம்!

வாழிய பாரதம்!!

# இந்திய அரசியல் சட்டம்- அதிகாரப் பட்டியல்

இந்தியாவின் அரசியல் சட்டம் 7-வது அட்டவணை 246வது பிரிவின் கீழ்வரும் அதிகாரப் பட்டியலில் மத்திய அரசுக்கென ஒதுக்கப்பட்டுள்ள அதிகாரங்கள் கீழ் வருமாறு :

## 1-வது பட்டியல்-யூனியன் அதிகாரங்கள்

1. இந்தியாவையும் அதன் ஒவ்வொரு பாகத்தையும் பாதுகாத்தல். 2, 3, 4. கப்பல், விமான, தரைப்படைகளும். அதனதன் தொழில்களும், நிலப்படை நகரங்களும். 5, 6. வெடி மருந்துகள், அணுசக்தி, அதன் தாதுப் பொருள்கள். 7. நாட்டின் பாதுகாப்பிற்கும், போருக்கும் தேவையான தொழிற்சாலைகள். 8. மத்திய ரகசியத் தகவல் நிலையமும் புதிய கண்டு பிடிப்புகளும். 9, 10, 11. அயல் நாட்டு விவகாரங்கள்—குறிப்பாக அரசியல், வர்த்தகப் பிரதிநிதித் துவம். 12. ஐக்கிய நாடுகள் சபை. 13. உலக நாடுகளின் மாநாடுகளில் பங்கு பெறுதல். 14. வெளிநாட்டு ஒப்பந்தம். 15. போரும் சமாதானமும். 16. வெளி நாடுகளில் தொடர்பு கொண்ட அதிகார வரம்புகள். 17. குடி உரி

மைகள். 18. மாநிலங்களை விட்டு ஓடிய குற்றவாளிகளைப் பிடித்துக் கொடுத்தல். 19. இந்திய-வெளிநாட்டுப் போக்கு வரத்திற்கான உறுதிச் சீட்டு. 20. வெளிநாட்டுப் பயணங் கள். 21. கடலிலும் விமானத்திலும் நடத்தப்படும் குற்றங் கள். 22. நீராவி வண்டிப் பாதைகள். 23. நெடுஞ்சாலை களைத் தேசியச் சாலைகளாக மாற்றல். 24. உள்நாட்டுக் கப்பல், படகு போக்குவரத்து (பெருங் கால்வாய்கள்). 25. கப்பல் வாணிபத்தைப் பற்றிய கல்வியும் பயிற்சியும். 26. கலங்கரை விளக்கம். 27. பெரும் துறைமுகங்கள். 28. துறைமுக அதிகாரங்கள். 29. விமானப் போக்கு வரத்தும், நிலையங்களும். 30. போக்குவரத்துச் சாதனங் கள். 31. தபால், தந்தி, கம்பியில்லாத் தந்தி, தொலை பேசி. 32. நீர், நில சம்பந்தமான அரசாங்கச் சொத்துக் களும் வருமானமும். 33. அரசாங்கத்தின் தேவைக்காக சொத்துக்கள் வாங்குவது, தனியார் சொத்துக்களை கைக் கொள்வது. 34. சமஸ்தானங்களின் பாதுகாப்பு, நீதி மன்றம். 35. அரசாங்கத்தின் பொதுக் கடன். 36. நாண யங்களும், நாணய மாற்றுதலும். 37. வெளிநாட்டுக் கடன். 38. அரசாங்க நிதி சேமிப்பு நிலையம் (ரிசர்வ் பாங்க்). 39. அஞ்சல் நிலைய நிதி சேமிப்பு நிலையம் (சேவிங்ஸ் பாங்க்). 40. மத்திய, மாநில சூதாட்டங்கள் (ரேஸ்). 41. வெளிநாட்டு வியாபாரமும், ஏற்றுமதி இறக்குமதி வரியும். 42. உள் ராச்சியங்களின் வியா பாரம். 43. வியாபாரக் குழுக்களை உருவாக்கலும் நீக்க லும். 44. பல்கலைக் கழகம் அல்லாத மற்ற குழுக்களின் விவகாரங்கள். 45. நிதி சேமிப்பு நிலையங்கள் (பாங்க்). 46. பண்டமாற்றுச் சீட்டுகள், பணமதிப்புச் சீட்டுகள், உறுதிச் சீட்டுகள் (உண்டியல்). 47. உயிர்ப் பாதுகாப்பு நிதி (இன்ஷ்யூரன்ஸ்). 48. சேமிப்பு மாற்றுதல், எதிர்கால விலை முடிவுகள். 49. வியாபார உரிமைக் குறியீடுகள்.

50. நிறை, நீட்டல், அளவைகள். 51. ஏற்றுமதி வரியும், விலை நிர்ணயமும். 52. தொழிற்சாலைகளை அரசாங்கம் கட்டுப்படுத்தல். 53. எண்ணெய்க் கிணறுகள், அது பற்றிய சட்டங்கள். 54. சுரங்கங்கள், அதுபற்றிய சட்டங்கள். 55. எண்ணெய்க் கிணறுகளிலும், சுரங்கங்களிலும் வேலை பார்க்கும் தொழிலாளர் பாதுகாப்பு. 56, ஆறுகள், பள்ளத்தாக்குகள். 57. கடற்கரைக்கு மிக அப்பால் மீன் பிடிப்பும், மீன் இலாகாவும். 58. உப்பு உற்பத்தியும், வாணிபமும். 59. மயக்கந் தரும் பொருள்கள் (அபின்). 60. செய்திப் படக்காட்சி. 61. மத்திய ஆட்சி அலுவலாளர் தகராறுகள். 62. பொது நூல் நிலையம், கண்காட்சிகள் (மத்திய ஆட்சியின் உதவி பெறுபவை). 63. டில்லி, அலிகார், பனாரஸ் பல்கலைக் கழகங்கள். 64. விஞ்ஞான ஆராய்ச்சி நிலையங்கள் (மத்திய ஆட்சியின் உதவி பெறுபவை). 65. மத்திய ஆட்சியின் நேரடிப் பார்வையிலுள்ள பல்வேறு தொழிற் பயிற்சி ஆராய்ச்சிகள், விஞ்ஞான ரகசியங்கள். 66. தொழில் நுணுக்கக் கல்வி, அறிவியல் மேற்கல்வி. 67. புதை பொருள்கள், நினைவுச் சின்னங்கள். 68. நில, தாவர, உயிரின, மக்கள் வளர்ச்சிக் கணக்கெடுப்பு, பௌதீக ஆராய்ச்சி நிலையம். 69. மக்கட் தொகை கணக்கெடுப்பு. 70, 71. மத்திய ஆட்சியின் அதிகாரிகளை நியமித்தலும், ஓய்வுச் சம்பளமும். 72. பாராளு மன்றம், மேல்சபை, ஜனாதிபதி, உபஜனாதிபதி தேர்தல், தேர்தல்குழு. 73. பாராளுமன்ற உறுப்பினர்கள், சபாநாயகர்கள், சம்பளப் படி. 74. சபைக் குழுக்களின் அதிகார வரம்புகள். 75. மத்திய ஆட்சியின் மந்திரிகள், ஜனாதிபதி, கவர்னர்கள், கணக்காயத் தலைவர், நிதிக் கணக்கெடுப்பாளர் இவர்கள் சம்பளம், படி, உரிமைகள். 76. மத்திய-மாநில ஆட்சிகளின் கணக்கு மேற்பார்வை. 77. சுப்ரீம் கோர்ட் அது சம்பந்தப்பட்ட விஷ

யங்கள். 78, 79. மாநில தலைமை நீதி மன்றங்கள், உரிமைகள். 80. ஊர்க் காவல் நிலையத்தினரின் வெளி மாநில அதிகாரம். 81. இராச்சியங்களுக்குள் மக்கள் குடியேறுதல். 82. வருமான வரிகள் (விவசாயம் தவிர). 83. சுங்க வரி (ஏற்றுமதி வரியோடு). 84. புகையிலை வரி (சில மயக்கந் தரும் பொருள்களும்). 85. உற்பத்தி வாணிபம் முதலிய கூட்டுக் குழுக்கள்மீது வரி. 86 சொத்துரிமை வரி (விவசாயம் தவிர) முதலின் மீது வரி. 87. மரண வரி. 88. வாரிசு வரி (விவசாயம் தவிர). 89. போக்குவரவு வரி, ரயில்வே கட்டணத்தின்மீது வரி. 90. பண்டமாற்று வரி. 91. பங்கு, செக், பாலிசி முதலியன மாற்றுதல். 92. செய்தித்தாள் விற்றல், வாங்குதல், விளம்பரம் இவைகள்மீது வரி. 93. மேற்கண்டவைகள் தகராறு தீர்க்கும் அதிகாரம். 94. மேற்கண்டவைகளுக்கான கணக்குப் பரிசீலனை விசாரணை. 95. மேற்கண்டவைகளுக்கான நீதிகளும், நீதி மன்றங்களும், அதிகாரங்களும். 96. மேற்கண்டவைகளுக்கான செலவுத் தொகை. 97. இராச்சிய-மத்திய ஆட்சிகளின் அதிகாரங்களில் விட்டுப்போன அதிகாரங்கள், வரிகள் அத்தனையும்.

## 2-வது பட்டியல்: இராச்சிய அதிகாரங்கள்:

மாநில அரசுகளுக்கென ஒதுக்கப்பட்டுள்ள **அதிகாரங்கள் வருமாறு:**

1. பொது ஒழுங்கு. 2. ஊர்க்காவல் நிலையங்கள் (இரயில்வே உள்பட). 3. நீதி மன்றங்களும், அதிகாரங்களும் (உயர், உச்ச நீதிமன்றங்கள் தவிர). 4. சிறைகளும், கைதிகளும். 5. நகர, மாவட்ட ஆட்சி. 6. பொதுச் சுகாதாரமும், மருந்துச் சாலைகள், இல்லங்கள். 7. உள்

நாட்டு யாத்திரை. 8. மயக்கம் தரும் மது வகைகள். 9. ஊனமானவர்கட்கு உதவி. 10. சுடுகாடும், புதைவிடமும். 11. கல்வி (பல்கலைக் கழகம் உள்பட). 12. நூல் நிலையம், பொருட் காட்சி, டிராம், சாதனங்கள் (மத்திய ஆட்சிக்கு உட்படாதவை). 13. சாலைகள், பாலங்கள், படகு, மின்கால்வாய் (உள்நாட்டு) போக்குவரத்து. 14. விவசாயம், அதுபற்றிய கல்வி ஆராய்ச்சி, நோய்த் தடுப்பு. 15. கால்நடைகளின் பாதுகாப்பும் பயிற்சியும். 16. பட்டிகள். 17. விவசாயத்திற்கான பாசன வசதிகள், நீர்த் தேக்கம், நீர்ச் சக்தி. 18. நில உரிமைகள், முறைகள், நில மாற்றம், கடன். 19, 20. காடுகள், கொடிய மிருகங்கள், பறவைகள், பாதுகாப்பு. 21. மீன் பிடித்தல். 22. இளங் குற்றவாளிகள் நீதிமன்றம். 23. சுரங்க வீதிகள் (சில உரிமை). 24. தொழிற்சாலைகள் (சில உரிமை). 25. எரிவாயுவும், அதன் உரிமைகளும். 26, 27. இராச்சியத்திற்குள் வாணிப முறை, உற்பத்தி, விற்பனை. 28. விலை நிர்ணயமும், சந்தைகளும். 29. எடைகள், அளவைகள் (நிலையானவை தவிர). 30. கடன், விவசாயக் கடன்கள், கடன் கொடுப்போர். 31. சத்திரங்கள். 32. இலக்கிய விஞ்ஞான, மத, சமூக, கூட்டுறவுக் கழகங்கள் (மத்திய ஆட்சிக்கு உட்படாத). 33. பொழுது போக்குச் சாதனங்கள் (நாடகம், படம், போட்டி, கூத்து) 34. பந்தயங்கள், சூதாட்டங்கள். 35. நிலங்கள் கட்டிடங்கள், தொழில்கள். 36. சொத்துரிமைகள் ஆக்ரமிப்பு. 37. இராச்சிய சட்டசபைக்கான தேர்தல்கள். 38, 39, 40. இராச்சிய மந்திரிகள், சட்டசபை, மேல்சபையில் அங்கத்தினர்கள், தலைவர், உபதலைவர்கள், சபாநாயகர்கள் சம்பளப் படி, அதிகாரங்கள். 41. இராச்சிய ஆட்சி அலுவலகங்கள் அதற்கு ஆள்கள் தேர்ந்தெடுக்கும் குழு. 42. ஓய்வு கால ஊதியம். 43. இராச்சியப் பொதுக்கடன்.

44. புதையல். 45, 46. நிலவரி, விவசாய வருமானவரி. 47. விவசாய நிலங்களின் வாரிசுதாரர்களின் மேல் வரி. 48. மரணவரி (விவசாய நிலம்மாத்திரம்). 49. வீட்டுவரி (நிலங்கள் கட்டிடங்கள்). 50. கனிப்பொருள் உடமைகளின் வரி. 51. மதுச்சார வரி (மக்கள் உபயோகம்). 52. இராச்சிய எல்லைக் குள்வரும் பொருள்மீது வரி (உபயோகம் விற்பனை). 53. மின் சார வரி (உபயோகம் உற்பத்தி). 54. செய்தித்தாள் தவிர, மற்றவைகளை விற்க வாங்க வரி. 55. விளம்பர வரி (செய்தித் தாள் விளம்பரம் நீக்கி). 56. பிரயாண வரி (நிலம், நீர்). 57. வாகன வரி. 58. மிருக வரி, படகு வரி. 59. சுரங்கம். 60. தொழில் வரி. 61. தலைவரி. 62. பொழுது போக்குவரி (தமாஷா வரி). 63. பத்திரவரி. 64. இந்தப் பட்டியலிலுள்ளவிஷயங்கள் பற்றி சட்டங்களை மீறிச் செய்யும் குற்றங்கள். 65. நீதி மன் றங்களின் அதிகாரங்களும், வரம்புகளும் (சுப்ரீம் கோர்ட் தவிர). 66. இந்தப் பட்டியலிலுள்ள எந்த விஷயம் சம்பந்த மாகவும், கோர்ட்டில் வாங்கப்படும் கட்டணங்களைத் தவிர மற்ற கட்டணங்கள்.

## 3-வது பட்டியல்: மத்திய–இராச்சிய அரசுகளின் பொது அதிகாரங்கள்

மத்திய அரசும், மாநில அரசும் சேர்ந்து நிர்வகிக்கக் கூடிய அதிகாரங்கள் வருமாறு :

1. குற்ற வழக்குச் சட்டம். 2. குற்ற இலாகா நிர்வாகம். 3. இராச்சியங்களை பொது சட்டத்தினால் நல்வழிப் படுத்து தல், நிர்வகித்தல், சமுதாயத்திற்குத் தேவையான பொருள் மீது அதிகாரம் செலுத்துதல். 4. இராச்சியத்திலிருந்து இராச்சியத்திற்கு கைதிகளைக் கொண்டு போதல் 5. விவா

கம், ரத்து, பாகப் பிரிவினை முதலான விவகாரங்களும் ஆவணப் பதிவு செய்தல். 6. சொத்துக்களை விற்றல், வாங்கல், ஆவணப் பதிவு (விவசாயம் தவிர). 7. முன் பணம் போட்டு வேலை செய்து பிறகு அரசாங்கத்திடம் பெறுதல் (காண்ட்ராக்ட்). 8. நடவடிக்கைக்குரிய குற்றங்கள். 9. கடன் தீர்க்க முடியாத கடனாளி, ஏமாற்றல். 10. செல்வமும், பாதுகாவலரும். 11. உயர்தர அதிகாரிகள். 12. பொதுச் சட்டங்கள், வழக்கு மன்றங்கள், சாட்சிகள். 13. நீதி மன்றங்கள் (குற்ற வழக்குத் தவிர). 14. நீதி மன்ற அவமதிப்பு. 15. நாடோடிகள், நாடில்லாத ஆதிக் குடியினர். 16. பைத்தியக்காரர்கள். 17. ஜீவகாருண்யம் (மிருகங்களிடம்). 18. உணவுப் பொருள்களில் மோசடி. 19, 20. மருந்துகள் விஷம், சமுதாய, பொருளாதாரத் திட்டங்கள். 21. இயந்திரசாலை, வாணிபம் ஆகியவைகள் ஆதிக்கம், குழுக்கள். 22. தொழிலாளர் சங்கங்களும், தகராறுகளும். 23. சமுதாய, தொழிலாளர், வேலையற்றோர் பாதுகாப்பும், பாதுகாப்பு நிதியும். 24. தொழிலாளர் வேலை, நஷ்டஈடு, ஓய்வு நேர ஊதியம், சேமிப்பு, உதவி நிதி முதலியன. 25. தொழிற் கல்விப் பயிற்சி. 26. சட்ட 'மருத்துவ' தொழிற் கல்வி. 27, 28. அகதிகள் பாதுகாப்பு, அற நிலையங்கள். 29. தொத்து நோய்கள் (இராச்சியத்திற்கு இராச்சியம் பரவாமல் தடுத்தல்). 30. பிறப்பு, இறப்புக் கணக்கெடுப்பு. 31. துறைமுகங்கள் (பெரியவை தவிர). 32. கப்பல், படகு போக்குவரத்து (கால்வாய்களில்). 33. தொழிற்சாலைகளில் பொருள்களை விற்பது, வினியோகிப்பது. 34. விலைவாசி நிர்ணயம். 35 இயந்திர சுழற்சி வண்டிகள். 36. சிறு தொழிற்சாலைகள். 37, 38. பாய்லர்கள், மின்சாரம், புத்தகம், அச்சுக்கூடம், செய்தித் தாள். 40. பொருள் ஆராய்ச்சி நிலையங்கள் (மத்திய ஆட்சியிலுள்ளது தவிர). 41. அகதிகள் சொத்துப் பாதுகாப்பு வினியோகம். 42. அரசாங்க ஆக்ர

மிப்புச் சொத்துக்களுக்கு விலை நிர்ணயித்தல். 43. இராச்சியத்திற்கு வெளியில் வரி வசூலித்தல். 44. முறிவரி (நீதிமன்ற வரி தவிர). 45. முதல், இரண்டாவது பட்டியல்களில் சொல்லப்பட்டவைகள்பற்றிக் கணக்கெடுப்பும், வரி விதித்தலும். 46. இந்தப் பட்டியலிலுள்ள அதிகாரங்கட்கு நீதிமன்றத்தின் தீர்ப்புகள். 47. இந்தப் பட்டியலில் வருவதற்கான கட்டணம் (நீதி மன்றத்தின் வரி தவிர)

---

